# ஸ்ரீ சங்கர ஜயந்தி மலர்

துன்மதி (1981)



ஸ்ரீ சங்கர பக்த ஜன சபா

மேலமாம்பலம், சென்னை-600033

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவ ஜயம்

# ஸ்ரீ சங்கர ஜயந்தி மலர்

துன்மதி ஆண்டு (1981)


பதிப்பாசிரியர் :

சிவபுராண ஞான பூஜகர், சாஸ்த்ரப்ரசார பூஷணம்,
சிவபுராணச் சக்கரவர்த்தி, சிவபுராணக் காவலர்

ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா

(சங்கரன் அடிமை)

ஸ்தாபகர் — காரியதரிசி






வெளியீடு நன்னாள்

7-4-1982

ஸ்ரீ சங்கர பக்த ஜன சபா

5, டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு,
மேலமாம்பலம், சென்னை-600 033.

விலை ரூ. 6-00

உ

ஸ்ரீ குரு பாதுகாப்யாம் நம:

# குருவந்தனம்

ஸதாசிவ ஸமாரம்பாம் சங்கராசார்ய மத்யமாம்
அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தே குரு பரம்பராம்.
ச்ருதி ஸ்ம்ருதி புராணனும் ஆலயம் கருணாலயம்
நமாமி பகவத் பாத சங்கரம் லோக சங்கரம்.
ஜகதாம் குருவர்யஸ்ச காமகோட்யதிபம் சிவம்
சந்த்ரசேகர யோகீந்த்ர தேசிகம் ஸமுபாஸ்மஹே.

## ஸமர்ப்பணம்

இடர்களையா ரேனும் எமக்கிரங்கா ரேனும்
படரும் நெறிபணியா ரேனும்—சுடர் உருவில்
என்பருக் கோலத் தெரியாடும் எம்மானுர்க்கு
அன்பரு தென்னெஞ் சவர்க்கு

*—காரைக்காலம்மையார் அருளிய*

*அற்புதத் திருவந்தாதி—2*

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீசங்கராசார்ய சுவாமிகளின் பொன்னுர் திருவடி களில் இந்த புத்தக மலரை ஸமர்ப்பிக்கின்ருேம்.

ஸ்ரீ சங்கர பக்த ஜன சபா
மேலமாம்பலம்

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

ஸ்ரீ சங்கர பகவத்பாதாசார்ய பரம்பரை

**ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி**

**ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்**

**ஸ்ரீ மடம் ஸம்ஸ்தானம்**

**காஞ்சீபுரம் - 631 502.**

யாத்ராஸ்தானம்: நாகர்கோவில் தேதி 18-12-81

நல்ல விஷயங்களை நாட்டில் மூன்று வகையில் பரப்பலாம். ஒன்று பிரசங்கம் மூலம் - இரண்டு கவித்திறன் மூலம்- மூன்று புஸ்தகரூபம் மூலம். இந்த கார்யத்திற்கு காலம், நேரம் என்று கிடையாது. எப்பொழுது எப்பொழுது சந்தர்ப்பம் கிடைக்கிறதோ அப்பொழுதெல்லாம் செய்யலாம். ஆனால் சிலர் ஒரு நினைவுக்காக ஆண்டுதோறும் மலர் மூலம் இதை வெளியிடுகிறார்கள்.

அந்த வகையில் சென்னை பழைய மாம்பலம் ஸ்ரீசங்கர பக்த ஜன சபா ஆண்டுதோறும் ஸ்ரீசங்கர ஜெயந்தி சமயம் அதன் நினைவாக ஸ்ரீசங்கர ஜெயந்தி மலர் என்ற பெயரில் நல்ல விஷயங்களை வெளியிடுவதை வழக்கமாக கொண்டு உள்ளனர். ஆனால் இந்த ஆண்டு ஸ்ரீசங்கர ஜெயந்தி மலர் நல்ல விசேஷ விஷயங்களைச் சேகரித்து வர சற்று தாமதமாகி இப்பொழுது வெளியிட இருப்பது கேட்டு சந்தோஷிக்கிறோம்.

இந்த ஆண்டு மலரில் விசேஷமாக ஸ்ரீகணபதி அதர்வசீர்ஷோபநிஷத்—ஸ்ரீமத் அப்பைய தீக்ஷிதர் சைவார்யா சதகம்—ஆதிசங்கரர் ஸ்ரீசுப்ரமண்ய புஜங்கம் இம்மூன்றும்

தமிழில் உரையுடனும், ஸ்ரீசங்கரபத்ய புஷ்பாஞ்சலியு மற்றும் புராண - திருமுறை - வேதாந்தம் சம்பந்தமா கட்டுரைகளும் வெளியிடுவது ஒரு விசேஷ அமைப்பு.

இதுபோன்று ஸ்ரீசங்கர பக்த ஜன சபா பல துறை களிலும் நல்ல விஷயங்களை நாட்டிற்கு தந்து மக்களை ந வழிப்படுத்தி வருமாறு ஆசீர்வதிக்கிறோம்.

நாராயணஸ்மிருதீ

# வேத பாராயண சபா

## ஸ்ரீசங்கர மடம் — மேலமாம்பலம்

## சபையின் காரியக்ரமங்கள்

1. ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளின் பரிபூரண அநுக்ரஹத்தால் லோக க்ஷேமார்த்தமாய், மேலமாம்பலம் ஸ்ரீ சங்கர மடத்தில் மேற்படி சபையால் கிருஷ்ண யஜுர் வேத பாராயணம் கடந்த 20 வருட காலமாய் தினந்தோறும் மாலையில் 6-30 முதல் 7-30 மணிவரை உத்தம வேதவித்வான்களைக் கொண்டு நடைபெற்று வருகிறது. மாதம் முதல் தேதியும் பிரதோஷ தினங்களிலும் பாதுகைக்கு விசேஷ பூஜையும் தீபாராதனையுடன் சம்பாவனை செய்யப்படுகிறது. இந்து மதத்திற்கு ஆணிவேரான வேதங்களை அர்த்தத்துடன் அடிக்கடி மகா பண்டிதர்களைக் கொண்டு உபன்யாஸம் செய்யப்படுகிறது. ஒவ்வொரு வருடமும் கார்த்திகை மாதம் முதல் தேதி முதல் 44 நாட்கள் ஒவ்வொரு ஆஸ்திகர்கள் வீட்டிலும் போய் மண்டல வேத பாராயணம் செய்யப்படுகிறது.

2. ஒவ்வொரு வருடமும் ஆண்டு விழாவின் போது வைதிக மார்க்கமான ஹோம யக்ஞங்களும் சிறந்த பண்டிதர்களைக் கொண்டு உபன்யாஸமும் செய்யப்படுகிறது. அச்சமயம் சபையின் வேத பண்டிதர்களையும் கௌரவிக்கப்படுகிறது. ஷை சபை ஆஸ்திகர்களின் உதவியால் நடைபெற்று வருகிறது

3. தினந்தோறும் காலையில் 7-30 மணி முதல் 8-30 வரை உபயுக்தமான வேத மந்திரங்களை சிறுவர்களுக்கு சொல்லி வைக்கப்படுகிறது. ஆஸ்தான பகவத்பாதாள் நிர்வாகத்துடன் கூட இருந்து அநேக காரியங்களை நடத்தி வைப்பது. வேத பாகங்களை ஆண்டு விழா மலரில் வெளியிட்டு இலவசமாய் வழங்கப்படுகிறது. இவ்வாண்டு காடகம் மூன்று பிரச்னங்களையும் விவாஹ மந்திரார்த்தங்களையும் வெளியிட இருக்கிறது.

காரியதரிசி
**நடராஜ சர்மா—எலத்தூர்**

தலைவர்
**சுந்தரேசய்யர்—எலத்தூர்**

# பொருளடக்கம்

உ

குருபாதம்

திருக்கயிலாயபரம்பரைத் திருத்தருமையாதீனம்
26-ஆவது குருமஹாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்
அருளிய ஸ்ரீமுகம்

தருமபுரம்
மாயூரம் (அஞ்சல்) 609001.



"ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும் எம் ஆதியே"

உலக வாழ்க்கையில் சமய நெறிகளை உணர்ந்து அதனைக் கடைப்பிடித்து வாழ்வோரே உய்தி பெறுகின்றனர். இறைவன் பெருங்கருணையோடு அருளிய வேத சிவாகமங்களையும் திருமுறைகளையும் மற்றும் அவற்றின் தொடர்பான பிற நூல்களையும் கற்றுத் தெளியும் ஞானமே மக்கட்கு நல்வழிகாட்டும்.

அன்பர் திரு. ஆங்கீரச வேங்கடேச சர்மா அவர்கள் பல்லாண்டுகளாக அருள் நூல்களைக் கற்றுத் தெளிந்து பிறர்க்குணர்த்தி வரும் பெருந்தொண்டினை மேற்கொண்டு வாழ்ந்து வருபவர். இவரது நன்முயற்சியால் வெளிவரும் ஸ்ரீ சங்கர ஜயந்தி மலர் அருள் மணம் கமழும் அரிய படைப்பாக வெளிவரும் என்பதில் ஐயமில்லை.

மலர் நன்முறையில் வெளிவரவும் திரு. சர்மா அவர்கள் பல்லாண்டுகள் வாழ்ந்து சமயப் பணிகள் பலவும் ஆற்றவும் செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

சிவம்

உ
சிவ சிவ

காசிமடம் அதிபர், ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் அருளிய

# வாழ்த்துரை

திருப்பனந்தாள்—612504
(தஞ்சை ஜில்லா)
தேதி: 13-11-1981



பூமிமேல் புகழ்தக்க பரம்பொருளிடம் சிந்தை இடைபெருத அன்பும், சமயக் கடமைகளில் நெறியுடைமையும் திருமுறை நூல்களில் ஈடுபாடும், தெளிவும், ஆய்வுத் திறனும், கேட்பார் விரைந்து தொழில் கேட்கும் வண்ணம் திரந்தினிது சொல்லுதல் வன்மையும், தமிழ், வடமொழி, ஆங்கிலம் ஆகிய மும்மொழிப் புலமையும் மிக்க ஆங்கிரச வேங்கடேச சர்மா அவர்கள் நம் அன்பிற்கும் பாராட்டிற்கு முரியவர்.

வடமொழி இலக்கியத்தும், தமிழுள் புராணங்கள், திருமுறை நூல்கள் ஆகியவற்றுள்ளும் தொடர்ந்த பயிற்சி மேற்கொண்டமையால் இவருடைய பிரசங்கங்கள் இடையீடில்லாத ஆற்ரெழுக்காக அமைவதோடு, ஆங்கிலமும் வடமொழியும் ஆகிய மொழிக் கருத்துக்களை அரிமா நோக்கத்தோடு கண்டு உரைப்பதாகவும் அமைகின்றது.

தமிழ் மொழியில் வைணவ இலக்கியங்களைப் பலரும் விரும்பிப் படிப்பதற்கும், சைவ இலக்கியங்களைக் குறைந்த அளவினரே படிப்பதற்கும் முன்னவற்றிற்கு அரிய பெரிய விளக்கவுரை — வியாக்கியானங்கள் — எழுதப் பெற்றிருப்பதும் பின்னவற்றிற்கு அவை முறையாக இன்மையுமே

காரணம் என்பது மக்கள் மத்தியில் ஒரு சிலரிடை நிலவி வருகின்ற கருத்து. சர்மா அவர்கள் எழுதி வருகின்ற மொழிக்கு மொழி தித்திக்கும் மூவர் தமிழ் மாலை-திருமுறை விளக்கவுரைகள் — இக்குறையை நிவர்த்தி செய்யும்.

ஆன்மீக இலக்கியப் பணிகளை ஆற்றி வருகின்ற சர்மா அவர்கள் ஆண்டுதோறும் சங்கர ஜயந்தி மலர் வெளியிட்டு அதனுள் ஆத்திக அன்பர்களின் படைப்புக்களை இடம்பெறச் செய்வது நல்லதொரு பணியாகும்.

சங்கர ஜயந்தி மலர் இறை மணமும், தமிழ் மணமும் கமழ்ந்து அன்பர்களின் கருத்துக் களஞ்சியங்களுடன் பொன் மலராய்ப் பொலியவும், அன்பர் பணி தொடரவும் செந்திற் கந்தன் சேவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

சிவ சிவ



Om tat sat

**Jagatguru His Holiness Om Shanti Mownaananda Theertha Maha Swamigal Sannidanam**

SREE BHUVANESWARI PEETAM

**OM SHANTI ASHRAMAM AMBATTUR P.O. MADRAS - 53.**

# அருள்வாக்கு

ஸ்ரீ:

**ஸ: ப்ரம்ம ஸ: சிவ: ஸ:ஹரி ஸ: இந்த்ர:**
**ஸோக்ஷர பரமஸ்வராட்.**

**ஸாதாரணமாக ப்ரம்ம விஷ்ணு சிவன் என்று தான் சொல்வது வழக்கம். இங்கே சிவனுக்கு நடுநாயகம் கொடுக்கப்பட்டிருக்கிறது.**

**ஸமயத்தை அனுஸரித்து திருமூர்த்திகளுக்குமே அவ்வப் போது ருத்ராம்சம் உண்டு என்பதை விளக்குகிறது. இந்திராதி தேவர்களேயும் அக்ஷராம்சங்களேயும் கடந்து திருமூர்த்திகளுக்கும் மேலான பொருள் ஒன்றுண்டு! அது**

தான் பரமஸ்வராட்! எங்கும் நிறைந்த ஒன்று. ஸ்ரீ தக்ஷிணு மூர்த்தி அவஸரத்தைக் குறிப்பிடலாம்! பரமஸ்வராட்

எது பரப்ரம்மத்தை காண்பித்தருள்கிறதோ அதுதான் பரமஸ்வராட்! ப்ரத்தியக்ஷமாக ஸ்ரீ தக்ஷிணுமூர்த்தி என்பதே தெளிவாகிறது.

ஒவ்வொரு வேத வசனங்களையும் உள்கருத்துக்களையும் விளக்குவது எதுவோ அதுவே பரமஸ்வராட்.

எந்த வேதங்களை படித்தாலும் கேட்டாலும் பரப்ரம்ம தத்வத்தையே தன்னுள்ளே ப்ரகாசப்படுத்திக் கொள்ள வேண்டும்.

நாராயண ஸ்மரணம்

# ஆசிச் செய்தி

ஸ்ரீ:

ஸ்ரீசங்கர பக்த ஜன சபா, ஸ்ரீசங்கர ஜெயந்தி மலர் ஆங்கீரஸ S. வெங்கடேச சர்மா அவர்கள் வருஷா வருஷம் வெளியிடுவது பார்க்க மிகவும் சந்தோஷம்.

எல்லோரும் பக்திமான்களாக விளங்க ஸாக்ஷாத்கார ஸ்ரீ புவனேஸ்வரி ஸமேத ஸ்ரீ சந்திரமௌளீஸ்வராள் அனுக்ரஹம் புரிவாராக.

எல்லோருக்கும் பூர்ண ஆசீர்வாதம்

ஓம் சாந்தி

நாராயண ஸ்மரணம்

॥ ओं गं गणपतये नमः ॥



# ॥ श्री गणपत्यथर्वशीर्षोपनिषत् ॥

# ஸ்ரீ கணபதி அதர்வசீர்ஷோபநிஷத்

ஞானபாஸ்கர, சிவோத்கர்ஷ வர்ஷக
பிரம்மஸ்ரீ P. N. நாராயண சாஸ்திரிகளின்
தமிழ் விளக்கத்துடன் கூடியது.

ओं गणानां त्वा गणपतिं हवामहे कविं कवीनामुपमश्रवस्तमम् । ज्येष्ठराजं ब्रह्मणां ब्रह्मणस्पत आनः शृण्वन्नूतिभिः सीद सादनम् ।

श्रीगणेशाय नमः ॥ ॐ भद्रं कर्णेभिः शृणुयाम देवाः ॥ भद्रं पश्येमाक्षभिर्यजत्राः ॥ स्थिरैरङ्गैस्तुष्टुवाꣳ सस्तनूभिः ॥

व्यशेम देवहितं यदायुः ॥ स्वस्ति न इन्द्रो वृद्धश्रवाः ॥ स्वस्ति नः पूषा विश्ववेदाः ॥ स्वस्ति नस्ताक्ष्यो अरिष्टनेमिः ॥ स्वस्तिनो बृहस्पतिर्दधातु ॥ ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥ अथगणेशाथर्वशीर्षव्याख्यास्यामः

ॐ नमस्तेगणपतये । त्वमेवप्रत्यक्षं तत्वमसि ॥ त्वमेवकेवलं कर्तासि ॥ त्वमेवकेवलं धर्तासि ॥ त्वमेव केवलं हर्तासि ॥ त्वमेव सर्वं खल्विदं ब्रह्मासि ॥ त्वं साक्षादात्मासि नित्यम् ॥ ऋतं-वच्मि॥ सत्यं वच्मि॥ अव त्वं माम्॥ अव वक्तारम् ॥ अव श्रोतारम्॥ अव दातारम् । अव धातारम् ॥ अवानूचानमवशिष्यम् ॥ अव पश्चात्तात् ॥ अव पुरस्तात् ॥ अवोत्तरात्तात् ॥ अव दक्षिणात्तात् ॥ अव चोर्ध्वात्तात् ॥ अवाधरात्तात् ॥ सर्वतो मां पाहि पाहि समन्तात् ॥ त्वं वाङ्मयस्त्वं चिन्मयः ॥ त्वमानन्दमयस्त्वंब्रह्ममयः त्वं सच्चिदानन्दाद्वितीयोसि॥ त्वं प्रत्यक्षं ब्रह्मासि॥ त्वं ज्ञानमयो विज्ञानमयोसि ॥ सर्वं जगदिदं त्वत्तो जायते ॥ सर्वं जगदिदं त्वत्तस्तिष्ठति । सर्वं जगदिदं त्वयि लयमेष्यति ॥ सर्वं जगदिदं त्वयि प्रत्येति॥ त्वं भूमिरापोनिलोनलोनभः ॥ त्वं चत्वारिवाक्पदानि ॥ त्वं गुणत्रयातीतः ॥ त्वं कालत्रयातीतः ॥ त्वं देहत्रयातीतः ॥ त्वं मूलाधारस्थितोसि नित्यम् ॥ त्वं शक्तित्रयात्मकः ॥ त्वां योगिनो ध्यायन्ति नित्यम् ॥ त्वं ब्रह्मा त्वं विष्णुस्त्वं रुद्रस्त्वमिन्द्रस्त्व-

मग्निस्त्वं वायुस्त्वं सूर्यस्त्वं चन्द्रमास्त्वं ब्रह्म भूर्भुवःस्वरोम् ॥ गणादीन् पूर्वमुच्चार्य वर्णादींस्तदनन्तरम् ॥ अनुस्वारः परतरः ॥ अर्धेन्दुलसितम् ॥ तारेण रुद्धम् ॥ एतत्तव मनुस्वरूपम् ॥ गकारः पूर्वरूपम् ॥ अकारो मध्यरूपम् ॥ अनुस्वारश्चान्त्यरूपम् ॥ बिंदुरुत्तररूपम् ॥ नादः सन्धानम् ॥ संहिता सन्धिः ॥ सैषागणेश विद्या ॥ गणकऋषिः ॥ निचृद्गायत्रीछन्दः ॥ गणपतिर्देवता ॥ ॐ गं गणपतये नमः ॥

ओं एकदन्तायविद्महे वक्रतुण्डाय धीमहि ॥ तन्नोदन्तिः प्रचोदयात् ॥ एकदन्तश्चतुर्हस्तम्पाशमङ्कुशधारिणम् ॥ रदश्चवरदं हस्तैर्बिभ्राणं मूषकध्वजम् ॥ रक्तं लम्बोदरं शूर्पकर्णकं रक्तवाससम् ॥ रक्तगन्धानुलिप्ताङ्गरक्तपुष्पैः सुपूजितम् ॥ भक्तानुकम्पिनंदेवञ्जगत्कारणमच्युतम् ॥ आविर्भूतश्च सृष्ट्यादौ प्रकृतेः पुरुषात्परम् ॥ एवं ध्यायति यो नित्यं स योगी योगिनांवरः ॥ नमो व्रातपतये नमो गणपतये नमः प्रमथपतये नमस्ते अस्तु लम्बोदरायैकदन्तायविघ्नविनाशिने शिवसुताय श्रीवरदमूर्तये नमो नमः ॥ एतदथर्वशीर्षयोधीते ॥ स ब्रह्मभूयाय कल्पते ॥ स सर्वतः सुखमेधते ॥ स सर्वविघ्नैर्न बाध्यते ॥ स पञ्चमहापापात् प्रमुच्यते ॥ सायमधीयानो दिवसकृतं पापं नाशयति ॥ प्रात-

रधीयानो रात्रिकृतं पापं नाशयति ॥ सायंप्रातः प्रयुञ्जानोऽपापो-भवति ॥

सर्वत्राधीयानोऽपविघ्नो भवति ॥ धर्मार्थ काममोक्षञ्च विन्दति ॥ इदमथर्वशीर्षमशिष्याय न देयम् ॥ यो यदि मोहाद्दास्यति स पापीयान् भवति ॥ सहस्रावर्तनात् यं यं काममधीते तं तमनेन साधयेत् ॥ अनेन गणपतिमभिषिंचति सवाग्मी भवति ॥ चतुर्थ्यामनश्नन् जपति स विद्यावान् भवति ॥ इत्यथर्वणवाक्यम् । ब्रह्माद्यावरणं विद्यात् ॥ न बिभेदि कदाचनेति ॥ यो दूर्वांकुरैर्यजति स वैश्रवणोपमो भवति ॥ यो लाजैर्यजति स यशोवान् भवति ॥ स मेधावान् भवति । यो मोदकसहस्रेण यजति स वाञ्छितफलमवाप्नोति ॥ यःसाज्यसमिद्भिर्यजति स सर्वं लभते स सर्वंलभते ॥ अष्टौ ब्राह्मणान् सम्यग्ग्राहयित्वा सूर्यवर्चस्वी भवति । सूर्यग्रहणे महानद्यां प्रतिमासन्निधौ वा जप्त्वा स सिद्धमन्त्रो भवति ॥ महाविघ्नात्प्रमुच्यते ॥ महादोषात्प्रमुच्यते ॥ महाप्रत्यवायात्प्रमुच्यते ॥ महापापात्प्रमुच्यते स सर्वविद्भवति स सर्वविद्भवति ॥ य एवंवेद ॥ इत्युपनिषत् ॥ ओं भद्रंकर्णेभिः ० ॥ १ ॥ स्वस्तिनइन्द्रो ० ॥ १ ॥

॥ इति गणपत्यथर्वशीर्षोपनिषत् समाप्तम् ॥

உ

ஓம் கம் கணபதயே நம :

ஓம் கணானாம் த்வா கணபதிம் ஹவாமஹே கவிம் கவீநாமுபமச்ரவஸ்தமம் । ஜ்யேஷ்டராஜம் ப்ரஹ்மணாம் ப்ரஹ்மணஸ்பத ஆந: ச்ருண்வன்னூதிபி: ஸீத ஸாதனம் ।

ஸ்ரீகணேசாயநம:॥ ஓம்பத்ரம் கர்ணேபி: ச்ருணுயாம தேவா: ॥ பத்ராம் பச்யேமாக்ஷபிர்யஜத்ரா: ॥ ஸ்திரைரங்கைஸ்துஷ்டுவாகும் ஸஸ்தநூபி: ॥ வ்யசேம தேவஹிதம் யதாயு: ॥ ஸ்வஸ்தி ந இந்த்ரோ வ்ருத்தச்ரவா: । ஸ்வஸ்தி ந: பூஷா விச்வவேதா: ॥ ஸ்வஸ்தி நஸ்தார்க்ஷ்யோ அரிஷ்டநேமி: । ஸ்வஸ்தி நோ ப்ருஹஸ்பதிர்ததாது ॥ ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ॥ அத கணேசாதர்வசீர்ஷ வ்யாக்யாஸ்யாம:॥

ஓம் நமஸ்தே கணபதயே। த்வமேவப்ரத்யக்ஷம் தத்வமஸி॥ த்வமேவகேவலம் கர்த்தாஸி ॥ த்வமேவ கேவலம் தர்த்தாஸி॥ த்வமேவ கேவலம் ஹர்த்தாஸி॥ த்வமேவ ஸர்வம் கல்விதம் ப்ரஹ்மாஸி ॥ த்வம் ஸாக்ஷாதாத்மாஸி நித்யம் ॥ ருதம் வச்மி ॥ ஸத்யம் வச்மி ॥ அவ த்வம் மாம் ॥ அவவக்தாரம் । அவச்ரோதாரம் ॥ அவதாதாரம் ॥ அவதாதாரம் ॥ அவாநூசானமவசிஷ்யம் ॥ அவ பச்சாத்தாத் ॥ அவ புரஸ்தாத் ॥ அவோத்தராத்தாத் ॥ அவ தக்ஷிணாத்தாத் ॥ அவ சோர்த்வாத்தாத் ॥ அவாதராத்தாத் ॥ ஸர்வதோ மாம் பாஹி பாஹி ஸமந்தாத்॥ த்வம் வாங்மயஸ்த்வம் சின்மய: ॥ த்வமானந்தமயஸ்த்வம் ப்ரஹ்மமய : த்வம் ஸச்சிதானந்தாத்விதீயோஸி ॥ த்வம் ப்ரத்யக்ஷம் ப்ரஹ்மாஸி ॥ த்வம் ஞானமயோ விக்ஞானமயோஸி ॥ ஸர்வம் ஜகதிதம் த்வத்தோ ஜாயதே । ஸர்வம் ஜகதிதம் த்வத்தஸ்திஷ்டதி । ஸர்வம் ஜக

திதம் த்வயி லயமேஷ்யதி ॥ ஸர்வம் ஜகதிதம் த்வயி ப்ரத்யேதி ॥ த்வம் பூமிராபோநிலோநலோநப: ॥ த்வம் சத்வாரி வாக்பதானி ॥ த்வம்குணத்ராயதீத: ॥ த்வம் காலத்ரயாதீத: ॥ த்வம் தேஹத்ரயாதீத: ॥ த்வம் மூலாதார ஸ்திதோஸி நித்யம் ॥ த்வம் சக்தி த்ரயாத்மக: ॥ த்வாம் யோகிநோ த்யாயந்தி நித்யம்। த்வம் ப்ரம்மா த்வம்விஷ்ணுஸ்த்வம் ருத்ரஸ்த்வ மிந்த்ரஸ்த்வமக்நிஸ்த்வம் வாயுஸ்த்வம் ஸூர்யஸ் த்வம்சந்த்ரமாஸ்த்வம் ப்ரஹ்ம பூர்புவ:ஸ்வரோம் ॥ கணாதீந் பூர்வமுச்சார்ய வர்ணாதீம்ஸ்ததனந்தரம் ॥ அனுஸ்வார: பரதர: ॥ அர்த்தேந்து லஸிதம் ॥ தாரேண ருத்தம் ॥ ஏதத்தவ மனுஸ்வரூபம் ॥ ககார: பூர்வரூபம் । அகாரோ மத்யரூபம் ॥ அனுஸ்வாரச் சாந்த்ய ரூபம் ॥ பிந்துருத்தரரூபம் ॥ நாத: ஸந்தா னம் ॥ ஸம்ஹிதாசந்தி: ॥ ஸைஷா கணேசவித்யா ॥ கணகருஷி: ॥ நிச்ருத்காயத்ரீச்சந்த: ॥ கணபதிர் தேவதா ॥ ஓம் கம் கணபதயே நம: ॥

ஓம் ஏகதந்தாய வித்மஹே வக்ரதுண்டாய தீமஹி ॥ தந்நோ தந்தி:ப்ரசோதயாத் ॥ ஏகதந்தஞ் சதுர்ஹஸ்தம் பாசமங்குசதாரிணம் ॥ ரதஞ்ச வரதம் ஹஸ்தைர்பிப்ராணம்; மூஷகத்வஜம் ॥ ரக்தம் லம்போதரம் சூர்ப்பகர்ணகம் ரக்த வாஸஸம் ॥ ரக்த கந்தானுலிப்தாங்க ரக்தபுஷ்பை: ஸுபூஜிதம் ॥ பக் தானுகம்பினம் தேவஞ்ஜகத்காரண மச்யுதம் ॥ ஆவிர்பூதஞ்ச ஸ்ருஷ்ட்யாதௌ ப்ரக்ருதே:புருஷாத் பரம் ॥ ஏவம் த்யாயதி யோ நித்யம் ஸ யோகீ யோகி நாம்வர: ॥ நமோ வ்ராதபதயே நமோ கணபதயே நம: ப்ரமதபதயே நமஸ்தே அஸ்து லம்போதராயை கதந்தாய விக்ன விநாசினே சிவஸுதாய ஸ்ரீவரத மூர்த்தயே நமோ நம: ॥ ஏததர்வசீர்ஷம்யோதீதே ॥ ஸ ப்ரஹ்மபூயாய கல்பதே ॥ ஸ ஸர்வத: ஸுகமே ததே ॥ ஸ ஸர்வ விக்னைர்ந பாத்யதே ॥ ஸ பஞ்ச

மஹாபாபாத் ப்ரமுச்யதே ॥ ஸாயமதீயானோ திவஸ க்ருதம் பாபம் நாசயதி ॥ ப்ராதரதீயானோ ராத்ரி க்ருதம் பாபம் நாசயதி ॥ ஸாயம்ப்ராத: ப்ரயுஞ் ஜானோ (அ) பாபோ பவதி ॥

ஸர்வத்ராதீயானோ(அ)பவிக்னோ பவதி ॥ தர்ம அர்த்த காம மோக்ஷஞ்ச விந்ததி ॥ இதமதர் வசீர்ஷ மசிஷ்யாய ந தேயம் ॥ யோ யதி மோஹாத் தாஸ்யதி ஸ பாபீயான் பவதி ॥ ஸஹஸ்ராவர்த்தநாத்யம் யம் காமமதீதே தம் தமனேந ஸாதயேத் ॥ அநேந கணபதிமபிஷிஞ்சதி ஸ வாக்மீ பவதி ॥ சதுர்த்யா மநச்நந் ஜபதி ஸ வித்யாவான் பவதி ॥ இத்ய தர்வண வாக்யம் ॥ ப்ரஹ்மாத்யாவரணம் வித்யாத் ந பிபேதி கதாசனேதி ॥ யோ தூர்வாங்குரைர்யஜதி ஸ வைச்ரவணோபமோ பவதி ॥ யோ லாஜைர்யஜதி ஸ யசோவான் பவதி ॥ ஸ மேதாவான் பவதி ॥ யோ மோதக ஸஹஸ்ரேண யஜதி ஸ வாஞ்சிதபலமவாப் நோதி ॥ ய: ஸாஜ்ய ஸமித்பிர்யஜதி ஸ ஸர்வம் லபதே ஸ ஸர்வம் லபதே ॥ அஷ்டௌ ப்ராஹ்ம ணான் ஸம்யக்க்ராஹயித்வா ஸூர்யவர்சஸ்வீ பவதி । ஸூர்யக்ரஹணே மஹாநத்யாம் ப்ரதிமா ஸந்நிதௌ வா ஜப்த்வா ஸ ஸித்தமந்த்ரோ பவதி ॥ மஹாவிக்நாத் ப்ரமுச்யதே ॥ மஹாதோஷாத் ப்ரமுச்யதே ॥ மஹாப்ரத்யவாயாத் ப்ரமுச்யதே । மஹாபாபாத் ப்ரமுச்யதே ॥ ஸ ஸர்வவித்பவதி ॥ ஸ ஸர்வவித் பவதி ॥ ய ஏவம் வேத ॥ இத்யுப நிஷத் ।

ஓம் பத்ரம் கர்ணேபி: ॥ ஸ்வஸ்திந இந்த்ரோ ॥

(உபநிஷத் பாராயண முடிவிலும் சாந்தி மந்திரம் படிக்கப்பட வேண்டும்)

# தமிழ் விளக்கம்

ஓம் என்னும் எழுத்தின் வடிவனும், முழுமுதற் கடவுளு மான விநாயகன், பல பெயர்களைக் கொண்டவன். அவை களில் "கணபதி" என்னும் பெயர் ஒன்று, உலகில் வழங்கும் பெயர்களில் முதன்மையானது. "கணம்" என்றால் கூட்டம் என்று பொருள். சிவனுடைய பரிவாரங்களுக்கும் கணம் என்ற பெயருண்டு. இவை எல்லாவற்றிற்கும் தலைவன் கணபதி. இவர் பெருமையை ஆதிசங்கரர் சொல்வது—

"குழந்தை வடிவன், ஆனால் மலை போன்று வரும் தடைகளைப் போக்கடிப்பான். யானை முகத்தோன், ஆனால் ஐம்முகக் கடவுளான ஈசனாலும் கௌரவிக்கப்படுபவன். நான்முகன், தேவராஜன் முதயலிவர்களாலும் தேடத் தக்கவன், இப்பெருமை வாய்ந்த கணேசன், நம் எல்லோ ருக்கும், செல்வத்தை வழங்கட்டும்" என்று. இந்தகணபதி நம்மிடம் எதிர்பார்ப்பது முதல் வழிபாடு. பெரியதாக அல்ல; இதை செய்யாவிடில் யாரும் எந்தக் காரியத்தையும் நடத்த முடியாது. திரிபுரஸம்ஹாரம் செய்யக் கிளம்பிய முக்கண்ணனும் முதல் வழிபாடு மறந்ததால் தேர் முறிந்தது. "முப்புரமெரி செய்த ......... அச்சது பொடி செய்த" என்கிற பாடல் இங்கு கவனிக்கத்தக்கது.

பாரதம் எழுதியது, காவிரி ஆறு உண்டானது, ஸ்ரீ ரங்கத்தில் ரங்கநாதனைக் கோயில் கொள்ளச் செய்தது, இவை போன்று நிறைய ஆதாரங்கள் உண்டு. இந்த கணபதியை ஒருவராலும் எழுதப்படாததான "மறை" போற்றிப் புகழ்கிறது. நான்காவது வேதமான, "அதர்வ" வேதத்தில் இவருக்கென்று, தனி உபநிஷத்தே உளது, அதற்கு "கணபதி உபநிஷத்" என்று பெயர். இந்த உப நிஷத்திற்கு "பத்ரம் கர்ணேபி:" என்பது சாந்தி மந்திரம். இதன் பொருள் வருமாறு—

"தேவர்களே, நாங்கள் காதுகளால் நல்லதையே கேட்போம், கண்களால் நல்லவைகளையே பார்ப்போம். நோயற்ற உடலுடன் உங்களை துதிப்போம். தெய்வத் தொண்டு செய்வதிலேயே காலம் கழிப்போம், இந்திரன்—பூஷா—கருடன் — அரிஷ்டநேமி — ப்ருஹஸ்பதி இவர்கள் எல்லோரும் எங்களுக்கு மங்களத்தையே செய்யட்டும்" ஓம்—சாந்தி: என்று 3 முறை சொல்வது ஆத்யாத்மிக - ஆதி பௌதிக - ஆதிதைவிக - ஆகிய, மூன்று வகையான துயரங்களிலிருந்து விடுபட்டு, "ஓம்" என்பதால் பரமனை அறிவோம் என்று பொருள். இனி உபநிஷதம் தொடங்குவோம்.

ஓம் நமஸ்தே கணபதயே - கணபதியான உனக்கு வணக்கம்.

நீயே, கண்ணுக்குத் தெரிகிற பிரம்மமாயிருக்கிறாய், நீயே, எல்லாவற்றையும் படைப்பவனாயிருக்கிறாய் அவ்வாறு காப்பவனாயுமிருக்கிறாய்,. அழிப்பவனும் நீயே காணப்படும் இவையெல்லாம் பிரம்மமென்கிறபெயரால் நீயே, சொல்லப்படுகிறாய், நீயே நேரிட, ஆத்ம வடிவனாயிருக்கிறாய். மனதாலும், சொல்லாலும், உண்மையே பேசுகிறோம். நீ என்னை காப்பாற்று, சொல்லிக் கொடுப்பவனையும் கேட்பவனையும், கொடுப்பவனையும், காப்பவனையும், நல்ல சீடனையும் காப்பாய். கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு, மேலே, கீழே, எல்லாப்புறமும் சுற்றிலும் காப்பாற்றுவாய் நீயே சொல்லாயும் அறிவாயும் அளவற்ற மகிழ்ச்சியின் உருவாயும் எங்கும் நிறைந்த பிரம்மமாயும் இருக்கிறாய்.

த்வம் சச்சிதானந்தாத்விதீயோஸி, ஸத் = பிரும்மம் சித் = அறிவு, ஆனந்தம் = மகிழ்ச்சி, இவைகளையே உருவாய்க் கொண்ட இரண்டற்ற எங்கும் நிறைந்த பரம்பொருள். நீயே. நீ கண்ணுக்குத் தெரிந்த பிரம்மமாயிருக்கிறாய். பிரும்மத்தை அறியும் அறிவிற்கு ஞானம் என்று பெயர். மற்றவைகளை அறிவது விஞ்ஞாநம் என்று சொல்லப்படும். இந்த

உலகம் உன்னிடமிருந்தே உண்டாகிறது. உன்னிடமே நிலைத்திருக்கிறது. உன்னிடமே மறைந்து போகிறது.

பூமி, காற்று, நெருப்பு, ஜலம், ஆகாயம் ஆகிய ஐந்தும் நீயே. நான்குவிதமபன சொற்களும் நீயே. முக்குணங்கள், முக்காலம், ஸ்தூலஸூக்ஷ்ம காரணம் எனப்படும் மூன்று சரீரம் ஆகியவற்றிற்கும் அப்பாற்பட்டவர். எப்பொழுதும் மூலாதாரசக்ரத்திலிருக்கிறாய், இச்சா. ஞாந. க்ரியா ஆகிய மூன்று சக்தி வடிவாயிருக்கிறாய். ஸநகர் முதலிய யோகிகள் உன்னையே தியானிக்கின்றனர். பிரம்மா, விஷ்ணு, ருத்ரன், இந்திரன், அக்னி, வாயு, ஸூரியன், சந்திரன் இவை எல்லாமான பிரும்மமும் நீயே. இங்கு கணபதி மூலமந்திரம் சொல்லப்படுகிறது. க, அ, அனுஸ்வரம், பிந்து, நாதம் ஸம்ஹிதா இவைகளைக் கொண்டுள்ள உன்னுடைய மந்திரம் "ஓம் கம் கணபதயே நம:" இதற்கு கணகர் ரிஷி, நிச்ருத் காயத்ரீ சந்த: கணபதி தேவதை, இதற்கு ஏகாக்ஷரகணபதி பாலகணபதி என்றும் பெயர். "கம்" என்று ஒரே எழுத்தாயிருந்தாலும் "கணபதயே நம:" என்று சேர்த்தே ஜபம் பண்ண வேண்டும்.

இது வேதத்திலுள்ள மந்திரமானபடியால் உயர்ந்தது. குருவிடமிருந்து உபதேசம் பெற்றே ஜபிக்க வேண்டும். மலை போன்ற தடைகளும் போய் விடும், இதற்கு காயத்ரியும் உண்டு. "ஏகதந்தாய ....ப்ரசோதயாத் — ஒரு துதிக்கையும், அடியில் வளைந்ததாயும் யானை முகத்தோனுமான கணபதி, எங்களை நல்வழியில் நடத்தவேண்டும்" என்று பொருள். தியானிக்க வேண்டிய முறை:—

ஏகதந்தம் .....ஒரு தந்தம், நான்கு கைகள், கயிறு, ஈட்டி, அபயம், வரதம் கையில் கொண்டு, மூஷிகம் என்னும் "மூஞ்ஜூரை" கொடியாய்க் கொண்டவர்.

ரக்தம் ... சிவப்பாயும், தொங்குகிற வயிறும், முறம் போன்ற காதுகள், சிவப்பு ஆடை, சிவப்பு சந்தனம் பூசி, சிவப்பு மலர்களால் பூஜிக்கப்பட்டவர்.

பக்தானுகம்பினம்... ..பக்தர்களிடம் தயை காட்டுபவர், உலகிற்கு காரணமானவர், அண்டினவர்களை நழுவவிடா தவர்.

படைப்பின் முதலில் உண்டானவர், ப்ரக்ருதி புருஷன் இவைகளுக்கு மேல்பட்டவர். இம்மாதிரி தியானிப்பவர், யோகியாயும் மேம்பட்டவனுயும் விளங்குவான்.

நமோவ்ராதபதயே .........சைன்யங்களுக்குத் தலைவன் கூட்டத் தலைவன், சிவகணங்கள் தலைவன், தடைகளைப் போக்கடிப்பவன், சிவகுமாரன் எப்பொழுதும் நன்மையே செய்பவர். இது ஒரு மாலா மந்திரம், இதை ஜபிக்கலாம், ஹோமம் செய்யலாம். மிகவும் உயர்ந்தது. இனி பயனைச் சொல்லுகிறது.

அதர்வ வேதத்திலுள்ள இந்த உபநிஷத்தை எவன் படிப்பானே, அவன் நீண்டநாள் ஸுகமாய் வாழ்வான். மலை போன்ற தடைகள் போய் விடும். கொலை, கொள்ளை, கற்பழித்தல், கட்குடித்தல், இவைகளுக்கு உடந்தையா யிருப்பது ஆகிய ஐந்து பெரும் பாவங்களும் போய் விடும். மாலையில் படித்தால் பகலில் செய்த குற்றங்கள் அகலும். காலையில் படித்தால் இரவில் செய்தவை அகலும். இரண்டு வேளைகளிலும் படித்தால், எல்லா பாவங்களும் நீங்கப் பெறுவான்.

அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கையும் ஒருங்கே அடைவான். நல்ல சிடனுக்கு இதை உபதேசிக்க வேண்டும். தகுதியற்றவனுக்குக் கொடுத்தால் பாபியாய் விடுவான். 1000 முறை ஜபித்தால் நினைத்தவைகளை நிச்சயம் அடைவான். இதைச் சொல்லி கணபதிக்கு அபிஷேகம் செய்தால் யஜமானன் ஆவான்.

சுக்ல சதுர்த்தியில் ஜபித்தால் நன்கு படிப்புவரும். இது அதர்வவேதவாக்யம்.

ஹோமத்ரவ்யங்களும் பயனும் சொல்லப்படுகிறது.

நெல்பொரியால் ஹோமம் செய்தால் புகழ் பெறுவான்

அருகம்புல்லினல் ஹோமம் செய்தால் குபேரன்மாதிரி ஆகிவிடுவான்.

1000, கொழுக்கட்டைகளால் ஹோமம் செய்தால் நினைத்தவைகளை எல்லாம் அடைவான். நெய், ஸமித்து களால் ஹோமம் செய்தால் எல்லாவற்றையும் அடைவான்.

8 பிராம்மணர்களை வைத்து ஜபித்து ஹோமம் செய்து, சாப்பாடு போட்டால், சூரியனுக்கு ஒப்பாய் விடுவான்.

ஸூர்யக்ரஹணத்தில் ஆற்றங்கரையில் கணபதி உருவை வைத்து ஜபித்தால் மந்திரஸித்தி ஏற்பட்டு விடும். பெரிய தடைகள், மிகப்பெரிய குற்றங்கள், தகாத செய்கைகள் பெரிய பாவங்கள் எல்லாவற்றிலிருந்தும் விடுபட்டு எல்லாம் தெரிந்தவனாய் விளங்குவான்.

இம்மாதிரி அதர்வவேதம், கணபதி உபநிஷத் கூறி யுள்ளது.

முதற்கடவுளான கணபதியைக்குறித்து இந்த உப நிஷத்தை படித்தல், சொல்லியுள்ள முறைப்படி மந்திரம் ஜபித்தல், கூடிய அளவு ஹோமம் செய்வது இவை எல்லாம் குருவிடமிருந்து கசடறக் கற்று நடத்தி வந்தால் இமயம் போன்ற தடைகள் கூடவிலகி சுகமாய் நீடூழிவாழ்வான். எந்தக் காரியம் நாம் தொடங்கினாலும் முதலில் மஞ்சளினால் உருவம் பண்ணி பூஜித்து ப்ரார்த்தித்தே செய்ய வேண்டும், இல்லாவிட்டால் பயன் தராது.

உலகமக்கள் நன்மை பெற வேண்டி ஸ்ரீ சங்கரபக்தஜன சபா ஆண்டு மலரில் ஸ்ரீஆங்கீரஸ வேங்கடேச சர்மா அவர்கள் இதைப் பிரசுரிக்க முன்வந்துள்ளார். அவருக்கு நன்றி செலுத்துவோம். சுபம்

உ

ஓம் ஸ்ரீ சங்கர குரவே நம:



# ॥ श्री शङ्कर पद्य पुष्पांजलिः ॥

# ஸ்ரீ சங்கர பத்ய புஷ்பாஞ்சலி

தமிழ் உரை

Dr. N. கங்காதரன், M.A., M.Litt., Ph.,D.

उद्धृत्य वेदपयसः कमलामिवाब्धेः
आलिङ्गिताखिल जगत्प्रभवैकमूर्तिम् ।
विद्यामशेषजगतां सुखदामदाद्यः
तं शङ्करं विमलभाष्यकृतं नमामि ॥ १ ॥

உத்ருத்ய வேதபயஸ: கமலாமிவாப்தே:
ஆலிங்கிதாகில ஜகத்ப்ரபவைகமூர்த்திம் ।
வித்யாமசேஷஜகதாம் ஸுகதாமதாத்ய:
தம் சங்கரம் விமலபாஷ்யக்ருதம் நமாமி ॥ 1 ॥

—விவரணாசார்யர்

1. உலகின் காரணமான திருமாலைத்தழுவிய கடலி னின்றும் தோன்றிய இலக்குமியைப் போன்ற மறைகளா கின்ற கடலினின்றும் எடுத்து, உலகமனைத்திற்கும் நன்மை பயக்கும் ஆன்ம அறிவைக் கொடுக்கும் மாசற்ற பாஷ்யம் (என்னும் உரையை) நமக்களித்த ஸ்ரீ சங்கர பகவத் பாதரை நான் வணங்குகின்றேன்.

भगवत्पाद पादाब्जपांसवः सन्तु सन्ततम् ।
अपारासार संसार सागरोत्तार सेतवः ॥ २ ॥

பகவத்பாத பாதாப்ஜபாம்ஸவ: ஸந்து ஸந்ததம் ।
அபாராஸார ஸம்ஸார ஸாகரோத்தாரஸேதவ: ॥ 2 ॥

—சித்ஸுகாசார்யர்

2. கடக்க முடியாத ஸாரமற்ற ஸம்ஸாரமென்னும் கடலினைக் கடக்கும் பாலமாகின்ற பகவத்பாதரின் திருவடித் தாமரையினடித்தூசுகள் எப்பொழுதும் எம்மிடம் இருக் கட்டும்.

यमाश्रिता गिरां देवी नन्दयत्यात्मसंश्रितान् ।
तमाश्रये श्रियाजुष्टं शङ्करं करुणानिधिम् ॥ ३ ॥

யமாச்ரிதா கிராம்தேவீ நந்தயத்யாத்மஸம்ச்ரிதான் ।
தமாச்ரயே ச்ரியாஜுஷ்டம் சங்கரம் கருணாநிதிம் ॥3॥

—போதேந்திர யதி

3. கருணைக்கடலானவரும், எவரை எடுத்துரைப் பவராகக் கொண்டு தன் ஆன்மாவில் நிலைபெற்றவர்கள் வாக்தேவியினால் மகிழ்விக்கப்படுகின்றார்களோ அவரும், மேன்மை என்னும் சின்னத்துடன் விளங்குபவருமான அந்த சங்கரரை நான் சரணமடைகின்றேன்.

हरलीलावताराय शङ्कराय वरौजसे ।
कैवल्यकलना कल्पतरवे गुरवे नमः ॥ ४ ॥

ஹரலீலாவதாராய சங்கராய வரௌஜஸே ।
கைவல்யகலநா கல்பதரவே குரவே நம: ॥ 4 ॥

—உமாமஹேச்வரர்

4. சிவனாரின் லீலாவதாரமானவரும், மிகச்சிறந்த தேஜஸின் வடிவானவரும், முக்தியை வழங்கும் கல்ப விருக்ஷமானவரும், குருவானவருமான ஸ்ரீ சங்கரருக்கு வணக்கங்கள்.

नमः श्रीशङ्कराचार्यगुरवे शङ्करात्मने ।
शरीरिणां शङ्कराय शङ्करज्ञानहेतवे ॥ ५ ॥

நம: ஸ்ரீசங்கராசார்யகுரவே சங்கராத்மனே ।
சரீரிணும் சங்கராய சங்கரக்ஞானஹேதவே ॥ 5 ॥

—ந்ருஸிம்ஹாச்ரமி

5. சிவனாரின் வடிவானவரும், மானிடருக்கு நன்மை பயப்பவரும். முக்தியளிக்கும் அறிவுக்குக் காரணமான குருவான ஸ்ரீ சங்கரருக்கு வணக்கங்கள்.

श्रीगुरुं भगवत्पादं शरण्यं भक्तवत्सलम् ।
शिवं शिवकरं शुद्धमप्रमेयं नमाम्यहम् ॥ ६ ॥

ஸ்ரீகுரும் பகவத்பாதம் சரண்யம் பக்தவத்ஸலம் ।
சிவம் சிவகரம் சுத்தமப்ரமேயம் நமாம்யஹம் ॥ 6 ॥

—குர்வஷ்டகம்

6. சரணடையத்தக்கவரும், பக்தரிடம் அன்பு பூண்டவரும், மங்களகரமானவரும், நன்மை பயப்பவரும், சுத்தமானவரும் அளவிட முடியாத சக்தியை உடையவருமான, மதிப்பிற்குரிய குருவை வணங்குகின்றேன்.

சிவம்

உ

சிவமயம்

சிவனுண்டு பயமில்லை



# ॥ शैवार्याशतकम् ॥

## ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் அருளிய
## சைவார்யா சதகம்


தமிழ் உரை:

டாக்டர் ந கங்காதரன், M.A., M.Litt., Ph.D.


दयया यदीयया वाङ् नवरसरुचिरा सुधाधिकोदेति ।
शरणागतचिन्तितदं तं शिवचिन्तामणिं वन्दे ॥ १ ॥

**தயயா யதீயயா வாங் நவரஸருசிரா ஸுதாதிகோதேதி |**
**சரணுகத சிந்திததம் தம் சிவசிந்தாமணிம் வந்தே ॥ 1 ॥**

எந்த ஒருவருடைய கருணையினுல் வாக்கானது அமுதத்தைக் காட்டிலும் சிறந்த ஒன்பது ரஸங்களுடன் பரிமளிக்கின்றதோ, சரணமடைந்தவர்கள் விரும்பியதைக் கொடுக்கும் அந்த சிவனென்னும் சிந்தாமணியை வணங்குகின்றேன்.

शिरसि सितांशुकलाढ्यं करुणापीयूषपूरितं नयने ।
स्मितदुग्धमुग्धवचनं ललनाकलितं महः कलये ॥ २ ॥

**சிரஸி ஸிதாம்சுகலாட்யம் கருணுபீயூஷபூரிதம் நயனே |**
**ஸ்மித துக்த முக்தவசனம் லலனுகலிதம் மஹ: கலயே ॥ 2 ॥**

முடியில் பிறைச்சந்திரனைச் சூடியவரும், கண்களில் கருணைத் தேன்துளி நிறைந்தவரும், பால்போன்ற வெண்மையான புன்சிரிப்புடன் கூடிய முகம், இப்படி அழகிய உருவுடன் கூடிய சிவனென்னும் ஒளியை நினைக்கின்றேன்.

अन्ते चिन्तयते यत्तत्तामेतीति च त्वया गदितम् ।
शिव तव चरणद्वन्द्वध्यानान्निर्द्वन्द्वता चित्रम् ॥ ३ ॥

**அந்தே சிந்தயதே யத்தத்தாமேதீதி ச த்வயா கதிதம் |**
**சிவ தவ சரண த்வந்த்வ த்யானுந்நிர்த்வந்த்வதா சித்ரம் ॥ 3 ॥**

கடைசி நேரத்தில் எதை நினைக்கின்ருனே அதை ஒருவன் அடைகின்ருன் என்று நீர் கூறியருக்கின்றீர். ஓ சிவனே! உம்முடைய திருவடிகள் இரண்டையும் தியானம் செய்வதினுல் இரண்டற்ற நிலை (இறைவனுடன் ஒன்றுதல்) என்பது மிகவும் விந்தையல்லவா!

द्रुतमुद्धर हर संहर संहर भववैरिणं त्वतित्वरया ।
भव भवतोऽपि भवोऽयं रिपुरैतन्निन्दितं जगति ॥ ४ ॥

த்ருதமுத்தர ஹர ஸம்ஹர ஸம்ஹர பவவைரிணம்
த்வதித் வரயா |
பவ பவதோ(அ)பி பவோ(அ)யம் ரிபுரைதந்நிந்திதம்
ஜகதி ॥ 4 ॥

விரைவில் என்னைக் காப்பாற்றும். பிறப்பு இறப்பு என்னும் பகைவனை மிக விரைவாக அழியும். ஓ பவனே! இது உமக்கும் பகைவனே. பரமனுன நீரும் 'பவன்' இந்த எளியவனும் 'பவன்' (பிறப்பு இறப்பு அல்லல் படுபவன்). இந்த விஷயம் உலகில் இகழ்ச்சிக்குரியது அல்லவா.

चेतसि चिन्तय वामां वा मां वा न द्विधा स्थितस्याहम् ।
इति यदि वदसि दयाब्धे वामार्धे सा तवाप्यस्ति ॥ ५ ॥

சேதஸி சிந்தய வாமாம் வா மாம் வா ந த்விதா
ஸ்திதஸ்யாஹம் |
இதி யதி வதஸி தயாப்தே வாமார்த்தே ஸா தவாப்யஸ்தி ॥ 5 ॥

இனியவளை (தேவியை) அல்லது என்னை மனத்தில் நினை. நான் இரண்டுருவம் அற்றவன் என்று கூறுவீர்களேயானுல் கருணைக் கடலே! உம்முடைய இடப்புறத்திலும் அவள் குடி கொண்டிருக்கின்ருள்.

मित्रकलत्रसुतादीन् ध्यायस्यनिशं न मां क्षणं जातु ।
यदि कुप्यसि मयि दीने तुलयामि त्वां कथं सह तैः ॥ ६ ॥

மித்ரகலத்ரஸுதாதீன் த்யாயஸ்யநிசம் ந மாம் க்ஷணம்
ஜாது !
யதி குப்யஸி மயி தீனே துலயாமி த்வாம் கதம் ஸஹ
தை: ॥ 6 ॥

நண்பர்கள், மனைவி, மக்கள் இவர்களை இடைவிடாது நினைக்கின்றாய். என்னை நினைப்பதில்லை என்று இந்த எளியவனிடம் நீர் சினந்தால் உம்மை அவர்களுடன் நான் எப்படி ஒப்பிடுவேன்?

मत्कृतदुष्कृतशान्तिर्विषवह्निजलादियातनया ।
यदि निश्चयस्तवायं प्रेषय गरलाग्निगङ्गौघान् ॥ ७ ॥

மத்க்ருத துஷ்க்ருத சாந்திர்விஷவஹ்னி ஜலாதி யாதனயா |
யதி நிச்சயஸ்தவாயம் ப்ரேஷய கரலாக்னி கங்கௌகான் ॥ 7

என்னால் செய்யப்பட்ட பாவங்களுக்கு நஞ்சு, நெருப்பு, நீர் இவைகளின் மூலம் ஏற்படும் துன்பமே பரிஹாரம் என்பது உமக்கு உறுதி ஆனால் நஞ்சு, நெருப்பு, கங்கை, நீர் வெள்ளம் முதலியவற்றை என்னிடம் அனுப்பும். இவைகளே அவரிடம் உள்ள பொருட்கள் அல்லவா.

भोगं विहाय योगं साधय दास्ये तवापि परभागम् ।
मम किं न वावकाशस्त्वद्भूषाभोगिनां मध्ये ॥ ८ ॥

போகம் விஹாய யோகம் ஸாதய தாஸ்யே தவாபி பரபாகம் |
மம கிம் ந வாவகாசஸ்த்வத்பூஷா போகினும் மத்யே ॥ 8 ॥

போகத்தை விட்டு யோகத்தை கடைப்பிடி. உனக்கும் மறுபகுதியைத் தருகின்றேன் (என்று கூறுவீர்களேயானால்) உம்முடைய அணிகலன்களான அரவங்களினிடையே எனக்கு இடம் தான் ஏது?

ललनालोलविलोकनजितमित्यवमन्यसे कथं मां त्वम् ।
त्वयि जायार्धशरीरे शिव शिव नालोकनानुभवः ॥ ९ ॥

லலனு லோலவிலோகன ஜிதமித்யவமங்யஸே கதம்
மாம் த்வம் |
த்வயி ஜாயார்த்த சரீரே சிவ சிவ நாலோக நாநுபவ: ॥ 9 ॥

கவர்ச்சியான கண்களின் பார்வையினுல் வெல்லபட்டவன் என்று என்னை எவ்விதம் நீர் குறைவாக எண்ணுகின்றீர்? ஓ சிவனே! மனைவிக்கொரு பகுதி அளித்த உம்மால் உம் மனைவியைக் காணும் அனுபவம் பெற முடியாதது அல்லவா.

स्मरणादनुपदमीदृग्विस्मृतिशीलो न वल्लभोऽसि मम ।
उत्पाद्याशां भङ्क्तुर्लग्ना वृत्तिस्तवैवेयम् ॥ १० ॥

ஸ்மரணாதநுபதமீத்ருக் விஸ்ம்ருதி சீலோ ந வல்லபோ
(அ)ஸி மம |
உத்பாத்யாசாம் பங்க்துர்லக்ஞ வ்ருத்திஸ்தவைவேயம் ॥ 10 ॥

எண்ணிய மறுகணமே மிகவும் ஞாபகமற்றவனுக இருக்கிருய். அதனுல் நீ எனக்குப் பிரியமானவன் அல்ல (என்று நீர் கூறினுல்), முதலில் (நான் உன்னைக் காப்பேன்) என்ற நம்பிக்கையை உண்டாக்கி அதைத் தகர்த்தெறியும் நடத்தை உம்மிடம்தான் குடி கொண்டுள்ளது. (என்று நான் கூறுவேன்.)

पुत्रः पितृवत् पुत्री मातृवदित्थं ममात्र को दोषः ।
अहमपि भोगासक्तः प्रकृतिर्जाता विषादवती ॥ ११ ॥

புத்ர: பித்ருவத் புத்ரீ மாத்ருவதித்தம் மமாத்ர கோ தோஷ:—
அஹமபி போகாஸக்த: ப்ரக்ருதிர் ஜாதா விஷாதவதீ ॥ 11 ॥

தனயன் தந்தையைப் போல. மகள் தாயைப் போல அதனுல் என்னிடம் தவறு எதுவும் இல்லை. நானும் போகத்தில் ஈடுபட்டேன், அதன் பயன் எனக்கு துக்கமே ஏற்பட்டது.

இங்கு 'போக' என்னும் சொல் சிவனைக் குறிக்கும் பொழுது அரவம் பூண்டவர் என்றும், கவியைக் குறிக்கும் பொழுது உலக சுகபோகங்களில் ஈடுகொண்டவர் என்றும் பொருள் தரும். எனது தன்மையும் தன் தாயைப் போல துக்கத்தையே நுகர்கிறது. தன் தாய் நஞ்சுண்டவரைச் சார்ந்தவள் (விஷாதவதீ)

वपुरर्धं वामार्धं शिरसि शशी सोऽपि भूषणं तेऽर्धम् ।
मामपि तवार्धभक्तं शिव शिव देहे न धारयसि ॥ १२ ॥

**வபுரர்த்தம் வாமார்த்தம் சிரஸி சசீ ஸோ(அ)பி பூஷணம் தே(அ)ர்த்தம் |**
**மாமபி தவார்த்தபக்தம் சிவ சிவ தேஹே ந தாரயஸி || *12* ||**

உமது உடல் ஒரு பகுதி. மற்றொரு பகுதி அழகிய பெண் ஒருவள். தலையில் அணிந்த சந்திரனும் பிறைச்சந்திரன். உம்முடைய அரை பக்தனான என்னையும் ஹே சிவனே! நீர் ஏன் உம் உடலில் தாங்குவதில்லை?

எல்லாமே பிறையாகவும், பகுதியாகவும் கொண்டுள்ள நீர் உம் அரை பக்தனான தன்னையும் ஏற்றுக் கொள்ளல் வேண்டும் என்று கவி கோருகின்றார்.

स्तनपं शिशुं त्वदीयं पालय साम्ब द्रुतं न पाति यदि ।
जगतः पितेति गीतं यातं नामेति जानीहि ॥ १३ ॥

**ஸ்தனபம் சிசும் த்வதீயம் பாலய ஸாம்ப த்ருதம் ந பாதி யதி |**
**ஜகத: பிதேதி கீதம் யாதம் நாமேதி ஜானீஹி || *13* ||**

அம்பாளுடன் கூடியவனே! உம்முடைய இந்த பால் பருகும் குழந்தையை விரைவில் நீர் காத்தருளவில்லையெனில் உலகின் தந்தை என்னும் சொல் பெயரளவில் தான் இருக்கும் என்பதை நீர் அறிவீர்.

मातरि हित्वा बालं कार्याकुलधीः पिता बहिर्याति ।
शिव बत शक्नोषि कथं स्वाङ्गान्मातरं मोक्तुम् ॥ १४ ॥

**மாதரி ஹித்வா பாலம் கார்யா குலதீ: பிதா பஹிர் யாதி |**
**சிவ பத சக்னோஷி கதம் ஸ்வாங்காந்மாதரம் மோக்தும் || 14 ||**

தாயிடம் குழந்தையை விட்டு விட்டு பல வேலையில் ஈடுபட்ட தந்தை வெளியே செல்கின்றார். ஹே சிவனே! உம்முடைய உடலிலிருந்து அன்னையை விடுவிக்க உம்மால் முடியுமா என்று கூறும்.

அன்னையையே உம்மால் விலக்க முடியாதிருக்க, அன்னையிடம் என்னை ஒப்படைத்து விட்டு நீர் வெளியே செல்வது எங்ஙனம்?

गुणहीनतां तनूजे मयि दृष्ट्वा किं परित्यजस्येवम् ।
उचितं गुणिनस्त्वेतन्निर्गुणरूपस्य तेऽनुचितम् ॥ १५ ॥

**குணஹீனதாம் தநூஜே மயி த்ருஷ்ட்வா கிம் பரித்யஜஸ்யேவம் |**
**உசிதம் குணிநஸ்த்வேதந்நிர்குண ரூபஸ்ய தே(அ)நுசிதம் || 15 ||**

நற்குணமின்மையை இந்த மானிடனிடம் கண்டு என்னை ஏன் இப்படி புறக்கணிக்கின்றீர்? குணமுடையவர்களுக்கு இது உகந்ததே. ஆனால் குணம் எதுவும் அற்ற வடிவான உமக்கு இது சற்றும் உகந்ததில்லை.

பரமன் நிர்க்குணவடிவினர். அவருக்கு குணம் எதுவும் கிடையாது. அதனால் குணமில்லாத தன்னை புறக்கணித்தல் முறையற்றது என்று கவி முறையிடுகின்றார்.

कामक्रोधकटाभ्यां मदजलधारां निरङ्कुशे स्रवति ।
मत्कृतदुष्कृतकरिणि प्रकटा पञ्चास्यता तेऽस्तु ॥ १६ ॥

**காமக்ரோத கடாப்யாம் மதஜலதாராம் நிரங்குசே ஸ்ரவதி |**
**மத்க்ருத துஷ்க்ருதகரிணி ப்ரகடா பஞ்சாஸ்யதா தே (அ)ஸ்து ॥ 16 ॥**

நான் செய்த பாவச் செயல்கள் என்னும் யானையின் காமம், குரோதம் என்னுமிரு கண்களினின்றும் தானுகவே மத ஜலத்தின் தாரை பெருகுகின்றது. உம்முடைய ஐந்து முகங்களை உடனே தோன்றச் செய்யும்.

இங்கு 'பஞ்சாஸ்ய' என்னும் சொல்லிற்கு 'சிங்கம்' என்றும் பொருள் உண்டு. சிங்கமே யானையைக் கொல்ல வல்லது. காமக்ரோதத்தினுல் ஏற்பட்ட என் பாவங்கள் அழியட்டும் என்பது பொருள். ஐந்து முகங்களுடன் கூடியவர் சிவனுர்.

त्वद्वीनं मां दीनं दृष्ट्वा विषयातिरागसंबद्धम् ।
धावत्यकीर्तिरेषा नाथः शक्तोऽप्युदासीनः ॥ १७ ॥

**த்வத்தீனம் மாம் தீனம் த்ருஷ்ட்வா விஷயாதிராக ஸம்பத்தம் |**
**தாவத்ய கீர்த்திரேஷா நாத: சக்தோ(அ)ப்யுதாஸீன ॥ 17 ॥**

உம்மால் புறக்கணிக்கப்பட்ட எளியவனுனவனும் உலகப் பொருள்களில் மிக்க பற்றுடையவனுமான என்னைக் கண்டு புகழின்மையானது இவனுடைய பிரபு இவனைக் காக்க வல்லவனுயினும் பாராமுகமாக இருக்கின்ருர் என்று ஓடி வருகின்றது.

தந்தையானவர் பொருள் படைத்தவராயிருக்க கெட்டலைந்து திரியும் மைந்தனைக் கண்டு மக்கள் இவன் தந்தை சக்தியுடையவராயினும் பாராமுகமாக இருக்கின்ருர் என்று கூறுவது வழக்கம்.

अरिभिर्जितैरशक्तैर्विज्ञाप्यं सेवकैः प्रभोर्नीतिः ।
विषयैर्जितोऽस्मि शम्भो तव यच्छ्लाघ्यं तदाचरय ॥ १८

அரிபிர் ஜிதைரசக்தைர் விக்ஞாப்யம் ஸேவகை: ப்ரபோர் நீதி: |
விஷயைர் ஜிதோ(அ)ஸ்மி சம்போ தவ யச்ச்லாக்யம் ததாரசய ‖ 18 ‖

பகைவர்களால் வெல்லப்பட்ட செயலற்ற பணியாளர்களால் பிரபுவானவர் தெரிவிக்கப்படவேண்டியவர் என்பதே உலகநியதி. காமம் முதலியவற்ருல் வெல்லப்பட்டவனுக இருக்கின்றேன். ஹே சிவனே! உமக்கு எது முறையானது என்று தோன்றுகிறதோ அவ்விதம் செய்யும்.

संरक्ष्यते स्वदासैर्यद्वस्तु प्रभोरभीष्टतरम् ।
दासस्तयेष्टकामः कान्तां कनकं कथं त्यजेयमहम् ॥१९॥

ஸம்ரக்ஷ்யதே ஸ்வதாஸைர் யத்வஸ்து ப்ரபோரபீஷ்டதரம் |
தாஸஸ்தயேஷ்டகாம: காந்தாம் கனகம் கதம் த்யஜேயமஹம் ‖ 19 ‖

எவை பிரபுவிற்கு மிகவும் விருப்பமானவையோ அவைகளேயே அவரடிபணிந்தவரும் போற்றிக் காக்கின்றனர். அப்படியிருக்க உம்மடிபணிந்த நான் எவ்விதம் உமக்குப் பிரியமான பெண்ணேயும் பொன்னேயும் விடுவேன்?

உமையொரு பாகமுடைய சிவனுர் திரிபுரத்தை எரித்தபொழுது கனக மலேயை வில்லாக வளேத்தது நினேவில் கொள்ளவும்.

पापी पापं सुकृती सुकृतं भुङ्क्ते ममात्र किं नु गतम् ।
इत्यौदास्यमयुक्तं भृत्याकीर्तिः प्रभोरेव ॥ २० ॥

பாபீ பாபம் ஸுக்ருதீ ஸுக்ருதம் புங்க்தே மமாத்ர கிம் நு கதம் |
இத்யௌதாஸ்யமயுக்தம் ப்ருத்யா கீர்த்தி:ப்ரபோரேவ ‖ 20 ‖

பாவம் செய்தவன் பாவத்தையும் புண்ணியம் செய்தவன் புண்ணியத்தையும் நுகருகின்றுன். எனக்கு அதில் என்ன என்று உதாஸீனமாக இருப்பது உசிதமன்று பணியாளரின் புகழின்மை எஜமானனைத் தான் சேரும்.

பிரபுவான சங்கரரின் அடியார்கள் இந்நிலையில் இருக்கின்றனர் என்று மக்கள் கூறுவர்.

विकलेऽतिदीनचित्ते विषयाशामात्रधारिणि नितान्तम् ।
मयि रोषतः कियत् ते वद वद शम्भो यशो भावि ।।

விகலே(அ)திதீனசித்தே விஷயாசாமாத்ர தாரிணி நிதாந்தம் |
மயி ரோஷத: கியத் தே வத வத சம்போ யசோ பாவி || 21 ||

உடல் தளர்ந்து மனமும் மிகவும் தளர்ந்து இருப்பவனும் முந்தைய பழக்கத்தினுல் பொருட்களின் மீது பற்றை மாத்திரம் கொண்டிருக்கும் என்னிடம் மிக்க சினத்தினுல் இன்னம் எவ்வளவு காலம் உமது புகழ் என்று ஹே சம்புவே! நீர் கூறும்.

स्वगृहे भुवनत्रितये योगक्षेमे मुखानि चत्वारि ।
मत्प्रतिवचनं हि विना पञ्चमवदनस्य कुत्र गतिः ।।२२।।

ஸ்வக்ருஹே புவனத்ரிதயே யோகக்ஷேமே முகாநி சத்வாரி |
மத்ப்ரதிவசனம் ஹி விஞ பஞ்சம வதனஸ்ய குத்ர கதி: || 22 ||

தன் சொந்த இடத்திலும், மூன்று உலகங்களிலும் யோக க்ஷேமத்திற்காக உமக்கு நான்கு முகங்கள் உள்ளன. எனக்கு மறுமொழி கூறுவதைத் தவிர உமது ஐந்தாவது முகத்திற்கு வேறு என்ன வேலை?

சிவனுரின் நான்கு முகங்கள் முறையே தானிருக்குமிடத்திலும் மற்றும் மூன்று உலகங்களிலும் நலனைக் கண்காணிக்க

உள்ளன. அவருடைய ஐந்தாவது முகத்திற்கு அடியார்கள் கேட்பதற்கு மறு மொழி கூறுவதைத் தவிர வேறெந்த வேலையுமில்லை.

तव कोऽहं त्वं मम कः पञ्चस्वेवं विचारयस्वेति ।
भूपे दीनदयाब्धे पञ्चमुखत्वं त्वयि व्यक्तम् ॥ २३ ॥

**தவ கோ(அ)ஹம் த்வம் மம க: பஞ்சஸ்வேவம் விசாரயஸ்-வேதி |**
**ப்ருஷே தீனதயாப்தே பஞ்சமுகத்வம் த்வயி வ்யக்தம் ॥ 23 ॥**

ஹே கருணைக் கடலே! உமக்கு நான் யார்? நீர் எனக்கு என்ன? என்று ஐந்து உறுப்பினர் கொண்ட வழக்கு மன்றத்தில் விசாரணை செய் என்று நீர் கூறுவீரேயானல், உம்மிடமே ஐந்து முகங்கள் (ஐந்து உறுப்பினர் கொண்ட வழக்கு மன்றத்தைப் போன்று) உள்ளன என்பது நன்கு அறிந்ததே.

याचस्वान्यं धनिनं भविता तव को दिगम्बराल्लाभः ।
मां मा प्रतारयैवं ख्यातः श्रीकण्ठनामासि ॥ २४ ॥

**யாசஸ்வாங்யம் தனினம் பவிதா தவ கோ திகம்பரால்லாப: |**
**மாம் மா ப்ரதாரயைவம் க்யாத: ஸ்ரீகண்ட நாமாஸி ॥ 24 ॥**

செல்வந்தன் வேறொருவனைப் போய் யாசிப்பாய். திசைகளையே உடையாயணிந்தவனிடமிருந்து உனக்கு என்ன லாபம் ஏற்படும் என்று என்னை தட்டிக் கழிக்காதீர். நீங்கள் ஸ்ரீகண்டன் என்ற பெயருடன் பிரஸித்தமானவர்.

ஸ்ரீஎன்ற சொல்லிற்கு நஞ்சு வடிவில் நீலமாக சிவனரின் கழுத்தை லக்ஷ்மி அழகு படுத்துவதாக இங்கே கூறப் பட்டுள்ளது.

वसनाशनप्रदातरि मयि जीवति किं समाकुलस्त्वमिति ।
दोहाय मोच्यमानो वत्सः किं न त्वरामयते ॥ २५ ॥

வஸனுசன ப்ரதாதரி மயி ஜீவதி கிம் ஸமாகுலஸ்த்வமிதி |
தோஹாய மோச்யமானே வத்ஸ: கிம் ந த்வராமயதே ॥ 25 ॥

உடுக்க உடையும் உண்ண உணவும் கொடுக்க நான் உயிர் வாழும் பொழுது நீ ஏன் கவலைப்படுகிறுய் என்று கேட்பீரே யானுல் பால் குடிக்க அவிழ்த்து விடப்பட்ட கன்றுனது வெகுவிரைவாக சுற்றித் திரியும் அல்லவா?

அண்மையில் வேண்டும் பொருள் இருப்பினும் இச்சை யினுல் எட்டச் சுற்றி அலைவது உலக இயல்பு

पातकराशिरितीदं त्वयाभिधानं श्रुतं न तद् दृष्टम् ।
तद्दर्शनकुतुकं यदि मां द्रष्टुं किं विलम्बसे देव ॥ २६ ॥

பாதகராசிரிதீதம் த்வயாபிதானம் ச்ருதம் ந தத் த்ருஷ்டம் |
தத்தர்சனகுதுகம் யதி மாம் த்ரஷ்டும் கிம் விலம்பஸே
தேவ ॥ 26 ॥

பாவத்தின் குவியல் என்னும் இந்தச் சொல் உம்மால் கேட்கப்பட்டுள்ளதே தவிர பார்க்கப்படவில்லை. உமக்கு அந்தப் பாவக்குவியலைக் காண அவாவிருக்குமாயின், ஹே தேவனே! என்னைக் காண ஏன் இன்னம் கால தாமதம் செய்கின்றீர்?

पातकराशिरसि त्वं पश्याम्यत एव नाहमिति वदसि ।
पातकरूपाज्ञाने शिव तव सर्वज्ञताभङ्गः ॥ २७ ॥

பாதகராசிரஸி த்வம் பச்யாம்யத ஏவ நாஹமிதி வதஸி |
பாதகரூபாக்ஞானே சிவ தவ ஸர்வக்ஞதா பங்க: ॥ 27 ॥

நீ ஒரு பாவக்குவியல். அதனுல் தான் நான் உன்னைப் பார்க்கவில்லை என்று கூறுவீர்களேயானுல் ஒரு பாவியின் உருவம் எவ்விதமானது என்று அறியாத பாழுது ஹே சிவனே! உமக்கு யாவற்றையும் அறிபவர் என்ற சொல்லுக்கு அபவாதம் ஏற்படும்.

पापं पापमितीदं करोषि शिव किं मुधा बुधान् भ्रान्तान् ।
तत्सत्यं चेन्न कथं त्वयानुभूतं न दृष्टं वा ॥ २८ ॥

பாபம் பாபமிதீதம் கரோஷி சிவ கிம் முதா புதான் ப்ராந்தான் |
தத்ஸத்யம் சேந்ந கதம் த்வயாநுபூதம் ந த்ருஷ்டம் வா ‖ 28 ‖

ஹே சிவனே! இது பாவம்என்று கூறி அறிவாளிகளை ஏன் மகிழ்ச்சியுடன் பித்தர்களாக்குகின்றீர்? அது உண்மையெனில் அது உம்மால் ஏன் நுகரப்படவில்லை. மேலும் காணப்படவில்லை.

உண்மையை அறிந்த அறிவாளிகளுக்கும் புலப்படாத பாவம் என்பதை மீண்டும் மீண்டும் கூறி பித்தர்களாக்குகின்றீர் என்று பொருள்.

पापे लोकानुभवः स एव मानं ममाप्यननुभूते ।
न हि परकीयानुभवः ज्ञातुं शक्यः परेणापि ॥ २९ ॥

பாபே லோகாநுபவ: ஸ ஏவ மானம் மமாப்யநநுபூதே |
ந ஹி பரகீயாநுபவ: க்ஞாதும் சக்ய: பரேணுபி ‖ 29 ‖

என்னுல் நுகரப்படாவிடினும் உலகத்தில் மக்களால் பாவம் அனுபவிக்கப்படுகிறது. அதுவே எனக்கு பிரமாணம் என்று கூறுவீர்களேயானுல் இன்னெருவரின் அனுபவம் உம்மைப் போன்ற அறிவுடையவர்களாலும் அறியப்பட இயலாததாகும்.

लोकाभिन्नः सोऽहं वक्तुं वाक्यं ह्युपक्रमस्तव चेत् ।
सिद्धा मनोरथा मे त्वत्तः कस्यापि लोकस्य ।। ३० ।।

**லோகாபின்ன: ஸோ(அ)ஹம் வக்தும் வாக்யம் ஹ்யுபக்ர-மஸ்தவ சேத் |**
**ஸித்தா மனோரதா மே த்வத்த:கஸ்யாபி லோகஸ்ய ॥ 30 ॥**

நான் உலகினின்றும் வேறுபட்டவனல்ல என்று கூற முற்படுவீர்களாகில் நான் உம்மைத் தவிர மற்றொரு உலகத்தைச் சார்ந்தவனல்ல என்றாகிறது. அதனால் என் மனோரதம் நிறைவேறியது.

अतिवल्गनं ममैतन्मूढत्वं यद्यपि प्रभोः पुरतः ।
दीनः करोमि किं वा मद्विषये को निवेदयति ।। ३१ ।।

**அதி வல்கனம் மமைதன்மூடத்வம் யத்யபி ப்ரபோ: புரத: |**
**தீன: கரோமி கிம் வா மத்விஷயே கோ நிவேதயதி ॥ 31 ॥**

பிரபுவான உம்முடைய முன்னர் இம்மாதிரி விவாதங்கள் என்னுடைய முட்டாள்தனமே ஆனாலும் மிகவும் ஏழ்மை நிலையை அடைந்த நான் என் செய்வேன்? என்நிலையை உம்மிடம் எடுத்துக்கூற யார் தான் இருக்கின்றார்கள்.

பிரபுக்களிடம் சேவகனுக்கு பணிவுதான் வேண்டும். வாதம் செய்தல் கூடாது. எனினும் தன் நிலையை எடுத்துக் கூற ஒருவருமில்லாததினால் தானே கூறுவதாகக் கவி சொல்லிக் கொள்கிறார்.

लघुरसि किं त्वयि दयया मा मा मंस्थाः शिवेति सहसा त्वम् ।
भारो सुबोऽस्मि धृत्वा स्वकरे तुलयाशु मां शम्भो ।। ३२ ।।

லகுரஸி கிம் த்வயி தயயா மா மா மம்ஸ்தா: சிவேதி
ஸஹஸா த்வம் |
பாரோ புவோ(அ)ஸ்மி த்ருத்வா ஸ்வகரே துலயாசு மாம்
சம்போ || 32 ||

ஹே சிவனே! என்னை இலேசானவன் என்று உடனே முடிவு கட்டவேண்டாம். என்பால் தயை செய்ய உமக்கு அவகாசம் ஏது? ஹே சம்புவே! என்னை உம்முடைய கையில் தூக்கி நிறுத்திப் பாரும். நான் இந்த புவியில் பாரமாக இருக்கின்றேன் (என்பது தெரியும்.)

இங்கு 'கையில் தூக்கி' என்ற சொற்களிலிருந்து சிவனுரின் ஸ்பரிசத்தினுலேயே பெறற்கரியதைப் பெற்றவனுக ஆகிவிடுவேன் என்ற கவியின் கருத்து உள்ளடங்கியுள்ளது.

सस्ये तृणे च वृष्टिं तुल्यां देवः सदैव विदधाति ।
देवो महान् बत त्वं गुरुलघुवार्तां कथं कुरुषे ॥ ३३ ॥

ஸஸ்யே த்ருணே ச வ்ருஷ்டிம் துல்யாம் தேவ: ஸதைவ
விததாதி |
தேவோ மஹான் பத த்வம் குருலகுவார்த்தாம் கதம்
குருஷே || 33 ||

இந்திரனுனவன் பயிர் வகைகளின் மீதும், புற்களின் மீதும் ஸமமான அளவு தான் மழையைப் பொழிகின்றுன். நீங்கள் தெய்வத்துள் சிறந்தவர். அப்படியிருக்க இவன் கௌரவிக்கப்பட வேண்டியவன். இவன் புறக்கணிக்கத்தக்கவன் என்ற பாகுபாடு ஏன் என்று கூறும்.

दिष्टोद्दिष्टं दास्याम्यन्यन्नेष्टं यदि स्फुटं वाक्यम् ।
दत्ता कथं त्वयासावजरामरता मृकण्डुजनेः ॥ ३४ ॥

திஷ்டோத்திஷ்டம் தாஸ்யாம்யந்யந்நேஷ்டம் யதி ஸ்புடம்
வாக்யம் |
தத்தா கதம் த்வயாஸாவஜராமரதா ம்ருகண்டு ஜனே: || 34 ||

உன்னுடைய முன்வினைப்பயனை உனக்கு அளிக்கின்றேன். மற்றென்றும் உனக்குக் கொடுக்க எனக்கு விருப்பமில்லை என்று மனம் விட்டுக் கூறுகின்றீர் என்ருல் முன்னர் எவ்விதம் மார்க்கண்டேயனுக்கு பிறப்பு இறப்பு இரண்டுமில்லைஎன்னும் இந்த வரம் உம்மால் அளிக்கப்பட்டது.

नादत्तं प्राप्नोतीत्येतद्वाक्यं प्रतारणामात्रम् ।
उपमन्युना कदा वा कस्मै दुग्धोदधिर्दत्तः ॥ ३५ ॥

நாதத்தம் ப்ராப்னோதீத்யேதத் வாக்யம் ப்ரதாரண மாத்ரம் |
உபமந்யுநா கதா வா கஸ்மை துக்தோததிர் தத்த: ॥ 35 ॥

எது ஒருவனுல் கொடுக்கப்படவில்லையோ அது அவனுல் கிடைக்கப்பெறுவதில்லை என்னும் கூற்று வீணனதே. உபமன்யுவினுல் எப்பொழுதாவது யாருக்காவது பாற்கடல் அளிக்கப்பட்டதா என்ன?

உபமன்யு ஒரு சிறந்த சிவ பக்தர். அவருக்கு சிவனுர் பால் வழங்கியதாக புராணங்களில் கூறப்படுகிறது. தான் பிறருக்கு அளித்ததைதான் மீண்டும் திரும்பப் பெறுகிருன் என்னும் கூற்றுக்கு இந்த உதாரணங்காட்டி ஒவ்வாது என்று கவி கூறுகின்ருர்.

प्रबलतरोन्मादाढ्यं त्वामप्यगणय्य धावमानं च ।
मच्चेतोऽपस्मारं नियमय शम्भो पदाभ्यां ते ॥ ३६ ॥

ப்ரபலதரோன்மாதாட்யம் த்வாமப்யகணய்ய தாவமானம் ச |
மச்சேதோ(அ)பஸ்மாரம் நியமய சம்போ பதாப்யாம் தே ॥ 36 ॥

ஹே சம்புவே! மிக்கவும் பித்தம் பிடித்து உம்மையும் புறக்கணித்து ஓடும் இந்த மனமாகின்ற அபஸ்மாரத்தை உமது காலடியில் கட்டுப்படுத்திவையும்.

அபஸ்மாரம் என்பது வலிப்பு நோய். அது ஒரு அரக்கனின் வடிவம் என்று மருத்துவ நூல்களில் கொள்ளப்படுகிறது. கட்டிலடங்கா மனத்தை அபஸ்மாரத்திற்கு ஒப்பிட்டு அதனைக்கட்டுப்படுத்தி வைக்க இங்கு வேண்டப்பட்டுள்ளது.

आशापिशाचिका मां भ्रमयति परितो दशस्वपि दिशासु ।
स्वीये पिशाचवर्गे सेवायै किं न योजयसि ॥ ३७ ॥

**ஆசாபிசாசிகா மாம் ப்ரமயதி பரிதோ தசஸ்வபி திசாஸு |**
**ஸ்வீயே பிசாசவர்க்கே ஸேவாயை கிம் ந யோஜயஸி ॥ 37 ॥**

ஆசை என்னும் பிசாசு என்னைப் பத்து திசைகளிலும் சுற்றி அலையச் செய்கிறது. உம்முடைய பணியாளர்களான பிசாசுக் கூட்டத்தில் ஒன்றாக என்னையும் நீங்கள் ஏன் சேர்த்துக் கொள்ளவில்லை?

यक्षाधीनां रक्षां त्र्यक्ष निधीनां कुतो नु वा कुरुषे ।
साक्षान्मनुष्यधर्माऽप्यहह कथं नु विस्मृतिर्मम ते ॥३८॥

**யக்ஷாதீனாம் ரக்ஷாம் த்ர்யக்ஷ நிதீனாம் குதோ நு வா குருஷே |**
**ஸாக்ஷான் மநுஷ்ய தர்மா(அ) ப்யஹஹ கதம் நு**
**விஸ்ம்ருதிர் மம தே ॥ 38 ॥**

முக்கண்ணனே! நவநிதிகளைப் பாதுகாக்கும் பொறுப்பை குபேரன் முதலானவர்களிடம் எதற்காக ஒப்படைத்தீர்? குபேரன் 'மனுஷ்ய தர்மா'வானவன் என்றால் அம்மாதிரியான என்னை எப்படி மறந்தீர்?

இங்கு 'மனுஷ்ய தர்மா' என்னும் சொல் குபேரனைக் குறிக்கும் ஒரு மாற்றுசொல். அந்த சொல்லிற்கு மானிடனின் தர்மங்களை—லக்ஷணங்களை உடையவன் என்று பொருளைக் கொண்டு தன்னை ஏன் மறந்தார் சிவனார் என்று கவி வினவுகின்றார்.

धनदे सखित्वमेतत् तव यत् तत्रास्ति विस्मयः क इव ।
मयि निर्धने तदास्तां त्रिजगति चित्रं कियद्भावि ॥ ३९ ॥

**தனதே ஸகித்வமேதத் தவ யத் தத்ராஸ்தி விஸ்மய: க இவ |**
**மயி நிர்த்தனே ததாஸ்தாம் த்ரிஜகதி சித்ரம் கியத்பாவி || 39 ||**

குபேரனிடம் உமக்கு நட்பு எனில் அதில் வியப்பு யாது? செல்வமற்ற என்னிடம் (உமக்கு நட்பு) இருக்கட்டும். அதுவே மூவுலகிலும் எவ்வளவு வியக்கத்தக்கதாகும்?

குபேரனைப் போன்ற பணமுடையவர்களிடம் நட்பு கொள்ளுதல் என்பது உலகில் ஸாதாரணமானது. செல்வ மற்ற தன்னிடம் சிவனுர் நட்பு கொண்டால் அதுவே வியக் கத்தக்கதாகும் என்று கவி கூறுகின்ருர்.

सखितारूपनिधानं वित्तनिधानं द्विधा धनं तव यत् ।
नैककरे नृपनीतिस्तत्रान्यतरन्निधेहि मयि ॥ ४० ॥

**ஸகிதாரூபநிதானம் வித்தநிதானம் த்விதா தனம் த வயத் |**
**நைககரே ந்ருபநீதிஸ்தத்ராந்யதரந்நிதேஹி மயி || 40 ||**

உம்மிடமுள்ள இருவகைச் செல்வங்களான நட்பு பூணுதல், செல்வத்தை அளித்தல் என்பவற்றில் ஒன்றை எம்மிடம் கொடும். நீதிநெறியைப் பின்பற்றும் வேந்தர்கள் ஒருவரிடமே யாவற்றையும் கொடுப்பதில்லையல்லவா?

குபேரனிடம் நிதியைப் பாதுகாக்கும் பொறுப்பை விட்டால் தன்னிடம் நட்பு பூணவும், அல்லது குபேரனிடம் நட்பே அவருக்கு விருப்பமானுல் நிதிகளைக் காக்கும் பொறுப்பைத் தன்னிடமளிக்குமாறும் கவி சிவனுரைக் கேட் கின்ருர்.

पालय वा मां मा वा मत्तनुभूता तु पञ्चभूततति: ।
पोष्यावश्यं भवता भविता नो चेन्न भूतपति: ॥ ४१ ॥

**பாலய வா மாம் மா வா மத்தநுபூதா து பஞ்சபூதததி: |**
**போஷ்யாவச்யம் பவதா பவிதா நோ சேந்ந பூதபதி: ॥ 41 ॥**

என்னைக் காத்தருளும் அல்லது காத்தருளாமல் போம். நீங்கள் எப்படியும் என்னைக் காக்க வேண்டியவராவீர்கள். ஏனெனில் நீங்கள் பூதங்களின் தலைவர். என்னுடலில் பஞ்ச பூதங்களில் சேர்க்கை உள்ளது. அப்படி இல்லை எனில் நீங்கள் பூதங்களின் தலைவரல்ல.

இங்கு 'பூத' என்னும் சொல்லிற்கான இரு வேறு கருத்துகளைக் கொண்டு கவி தன் கருத்தைக் கூறியுள்ளளார்.

अतिकोमलं मनस्ते मुनिभिर्गीतं कुतोऽधुना कठिनम् ।
मन्ये विपाशनार्थं कठिनं चेतस्त्वया विहितम् ॥ ४२ ॥

**அதிகோமலம் மனஸ்தே முனிபிர் கீதம் குதோ(அ)துநா கடினம் |**
**மன்யே விபாசனார்த்தம் கடினம்சேதஸ்த்வயா விஹிதம் ॥ 42 ॥**

உம்முடைய மனமானது மிகவும் மென்மையானது என்று முனிவர்களால் போற்றப்பட்டுள்ளது. இப்பொழுது அது எவ்விதம் கடினமாக உள்ளது? 'கால கூடம்' என்னும் நஞ்சைப் பருகுவதற்காக உம் மனத்தைக் கல்லாக்கிக் கொண்டீர் என்று நினைக்கிறேன்.

मां द्रष्टुमष्टमूर्ते करुणा तेऽद्यापि किं न वोल्लसति ।
भिक्षाप्रसङ्गतो वा कियतां नो यासि सदनानि ॥ ४३ ॥

**மாம் த்ரஷ்டுமஷ்டமுர்த்தே கருணா தே (அ)த்யாபி கிம் ந வோல்லஸதி |**
**பிக்ஷா ப்ரஸங்கதோ வா கியதாம் நோ யாஸி ஸதனானி ॥ 43 ॥**

ஹே எண்வித உருவானவனே! என்னைக்காண உமக்கு இன்னமும் ஏன் கருணை உண்டாகவில்லை. பிக்ஷை எடுக்கும் காரணமாக எவ்வளவு வீடுகளில் நீர் செல்லாமலிருக்கின்றீர்?

அஷ்டமூர்த்தி என்பது ஐம்பூதங்களும், கதிரவன், சந்திரன், யஜமானன் எனப்படுவதாம். ஒவ்வொரு வீட்டிலும் சென்று பிக்ஷை எடுக்கும் சிவனுருக்கு தான் எங்கும் செல்வதில்லை என்று கூறி தனக்கு பரிவு காட்டாத காரணஞ் சொல்லி தப்ப முடியாது என்று கூறுகிருர்.

वित्ताधिपः सखा ते भार्या देहे तवान्नपूर्णाख्या ।
ऊरीकृतं न दूरीकुरुषे भिक्षाटनमपीश ॥ ४४ ॥

வித்தாதிப: ஸகா தே பார்யா தேஹே தவாந்நபூர்ணாக்யா |
ஊரீக்ருதம் ந தூரீகுருஷே பிக்ஷாடநமபீச ॥ 44 ॥

ஈசனே! குபேரன் உமது நண்பன். உமது மனைவி உம்முடைய உடலிலேயே இருக்கும் அன்னபூரணி என்பவள். இருந்தும் தான் ஏற்றுக் கொண்ட 'பிக்ஷை' எடுத்து சுற்றுதல் என்னும் பணியை நீர் விடுவதில்லை.

नाङ्गीकृतो मया त्वं तत एव न दर्शनं मम तवास्ति ।
इति नोत्तरं प्रदेयं शिव शिव विश्वेशनामासि ॥ ४५ ॥

நாங்கீக்ருதோ மயா த்வம் தத ஏவ ந தர்சனம் மம தவாஸ்தி |
இதி நோத்தரம் ப்ரதேயம் சிவ சிவ விச்வேசநாமாஸி ॥ 45 ॥

ஹே சிவனே! உன்னை நான் ஏற்றுக் கொள்ளவில்லை. அதனுல் தான் உனக்கு என் தரிசனம் கிடைக்கவில்லை என்று பதில் கூற வேண்டாம். நீங்கள் உலகமனைத்துக்கும் நாயகனுவீர்கள்.

यदि देहगेहरूपं ददासि देशाधिकारकार्यं मे ।
रसनाख्यलेखपत्रे सुदृढां कुरु नाममुद्रां ते ॥ ४६ ॥

யதி தேஹகேஹரூபம் ததாஸி தேசாதிகாரகார்யம் மே |
ரஸனுக்ய லேகபத்ரே ஸுத்ருடாம் குரு நாம முத்ராம்தே
|| 46 ||

இவ்வுடலாகின்ற இந்த என்னுடைய வீட்டிற்கு என்னை அதிகாரியாக நியமிக்கின்றீர் என்றுல் என் நாவாகின்ற ஒலையில் உமது பெயரை நிலையாகப் பொறித்துவிடும்.

रसनोक्तं कुरु सर्वं शिव तव नामाधिमुद्रितास्तीयम् ।
गणयसि मुद्रां न हि चेत् प्रभुतोच्छिन्ना तवैव स्यात् ॥

ரஸனேக்தம் குரு ஸர்வம் சிவ தவ நாமாதி
முத்ரிதாஸ்தீயம் |
கணயஸி முத்ராம் நஹி சேத் ப்ரபுதோச்சின்ன தவைவ
ஸ்யாத் || 47 ||

ஹே! சிவனே! எந்நாவு கூறும் யாவற்றையும் செய்யும். ஏனெனில் அதில் உமது உத்தரவு பொறிக்கப்பட்டிருக்கிறது அல்லவா! முத்திரை பொறித்ததை நீர் பொருட்படுத்த வில்லை என்றுல் உம்முடைய பிரபுத்தன்மையே புறக்கணிக்கப் பட்டதாகும்.

अत्याटिनं करालं भिक्षायुक्तं कपालशूलकरम् ।
मद्दारिद्र्यं भैरवरूपं कुरु चार्धचन्द्रयुतम् ॥ ४८ ॥

அத்யாடினம் கராலம் பிக்ஷாயுக்தம் கபாலசூலகரம் |
மத்தாரித்ர்யம் பைரவரூபம் குரு சார்த்தசந்த்ரயுதம் || 48 ||

சுற்றித் திரியும் கோரமான பிக்ஷை எடுக்கும் கோலத்துடன் மண்டை ஓடும், சூலமும் கையில் ஏந்தி, தலையில்

வர்களுக்கு வாய்க்கிறது. சங்கரநயினர் கோவில் (பிருதிவி ஸ்தலம்) ஸ்ரீ கோமதி அம்பாள் சமேத ஸ்ரீ சங்கரலிங்க மகா பிரபு, தாருகாபுரம் (அப்புஸ்தலம்) ஸ்ரீ அகிலாண்டேஸ்வரி சமேத ஸ்ரீ மத்யஸ்தநாதர், கரிவலம் வந்த நல்லூர் (தேயுஸ் தலம்) ஸ்ரீ ஒப்பனையம்பாள் சமேத ஸ்ரீ பால்வண்ண நாதர், தென்மலை (வாயு ஸ்தலம்) ஸ்ரீ சிவபரிபூரணம்பிகை சமேத ஸ்ரீ திரிபுரநாதேச்வரர், தேவதானம் (ஆகாயஸ்தலம்) ஸ்ரீதவம்பெற்ற நாயகி சமேத ஸ்ரீநச்சாடை தவிர்த்தருளிய நாதர் ஆகிய ஸ்தலமூர்த்திகளையும் ஒரு இரவில் தரிசித்து வரலாம். இது பஞ்சஸ்தல யாத்திரை எனப் பல வருடங் களாக சங்கரன்கோவிலில் சைவ சித்தாந்த சபையினர் இரண்டு பேருந்துகளில் ஆண்கள், பெண்கள் இருநூறு பேர் வரை சென்று தரிசித்து வரும் பேறு பெறுகிறுர்கள். இது போக கிராமங்களில் உள்ளோர் சுமார் 300 பேர் வரை சைக்கிளிலேயே சென்று வருகிறுர்கள்.

அவ்வாறு அந்தக்காலத்தில் சென்று வந்தால் என்ன பேறு கிடைக்கும்? பலன் என்னவென்றுல் கணக்கில் அடங்காப் பயன் கிட்டும். வேடன் ஒருவன் காட்டில் வேட்டையாடச் சென்றவன் வெகு நேரம் வேட்டை யாடி இரவு வந்ததால் அறியாது மிருகங்களுக்குப் பயந்து வில்வ மரத்தில் ஏறி உட்கார்ந்தால் உறங்கி விடுவோம். உறங்கி விட்டால் கீழே தவறி விழுவோம் என்று கருதித் தற்காப்புக்காக அவ்வில்வ மர இதழ்களை ஒவ்வொன்றுகப் பறித்துக் கீழே இடைவிடாது போட்டு வந்தான். காலையில் உதய நேரத்தில் இறங்கித் தரையில் பார்த்தான். அங்கே பிரபு லிங்கஉருவில் காட்சி அளித்தார். அவரது திருமேனி யாவும் வில்வ இதழ்கள். ஏதும் சொல்லாது அர்ச்சித்த மாதிரி திருமேனியில் வில்வம் விழுந்ததால் அதை செய்த வேடன் மேன்மையுற்றுன் என்று சிவராத்திரி மேன்மை பேசப்படுகிறது என்றுல் அறிந்து செய்தவகைக்கு எத்தகைய மேன்மை உண்டு என்பதைச் சிறிது எண்ணிப் பார்க்க வேண்டும்.

உயிர்கள் மேன்மையுறும்படி அம்பிகை நாளும் பூஜை செய்கிறுள். உன்பூஜை எப்போது முடியும்? என்று பெருமான் கேட்க அம்மை எல்லா உயிர்களும் தேவரீரிடம் அடைக்கலமாகும் வரை என்னுடைய பூஜை நடக்கும் என்று கூறுகிறுர். உயிர்கள் மீது எவ்வளவு பரிவு சிறிது சிந்திக்கவும்! தாயினும் சாலப் பரிவு.

விமரிசன் என்ற ஒரு அரசன் வலிமை மிக்கவன். யாசிப் பவர்க்கு மேகம் போல் மிகுந்த திரவியங்களைக் கொடுப் பவன். வேட்டையாடி மாமிசம் அளவில்லாது உண்பான்.

அவ்வளவு கொடிய செய்கையுடையவனுனுலும் சதுர்த்தசி திதி வருகின்ற நாளெல்லாம், யானையை உரித்த பரமசிவனை சங்கர சம்பு, சதாசிவ வாழ்க என்று சிவநாமங் களை எடுத்துத் தோத்திரஞ் செய்து மாட்சிமையுடைய பூஜாதிரவியங்கள் யாவும் குறைவுபடாது விரதம் மேற் கொண்டு பூஜை செய்து வந்தான். பூஜையின் முடிவில் புளகமுண்டாகும்படிப் பரமேச்வரனை தோத்திரஞ் செய் வான். நின்று கொண்டு பரத சாத்திரப்படி கூத்தாடுவான். எழுவகைச் சுரங்களும் வழுவாமல் பாடல்கள் பாடுவான். அவனுடைய சிவநேசம் இவ்வளவு என்று அளவிட்டுச் சொல்லும் பான்மையுடையதல்ல.

இம்முறையாகப் பூஜை செய்கின்றவன் அரசாட்சி செய்யும் தன்மையுடையவனுகச் செவ்வையான முறை மையை நடத்துகின்ற செங்கோலானது தீங்குகளெங்கும் நீங்கவும் எல்லாரும் நன்மார்க்கத்தில் நடக்கவும் நன்மை யல்லாத தியவழிகளையெல்லாம் நீக்கித் தருமத்தைப் பாது காத்து அரசாட்சி செய்தான். ஒருநாள் அவ்வரசன் மனைவி குமுதவதி தன் கணவன் திருவடியை வணங்கி யாவரும் வியப்புடன் பார்க்கத்தக்க அழகிலும், கல்வியிலும், அறிவி லும் ஒப்பில்லாதவரே தேய்வதும் வளர்வதும் இல்லாமல் எக்காலமும் ஒரே தன்மையாய் இராநின்ற இளந்திங்களை அணிந்திருக்கும் சந்திரசேகரனுகிய பரமசிவனுடைய

பூஜையை ஆகம விதிப்படி செய்கின்ற நீர் பாவத்துக்கிட மாய்ப் பொருந்திய மாமிசங்களைத் தின்று முறைமையில்லா மல் பெண் போகங்களை அனுபவிக்கின்றது என்ன காரணம் சொல்லுக'' என்று கேட்டாள்.

இவன் 'பூர்வஞ் செய்த தவப்பயனுல் இறப்பு, நிகழ்வு' எதிர்வு என்னும் முக்காலமும் அறிவேன். முன்பிறப்பில் நாயாய்ப் பிறந்து பம்பை நகரத்தில் தோன்றி அங்குள்ள சிவன் கோவிலில் பலிக்காக வைக்கும் அன்னத்தை உண்ணச் சென்ற காலத்தில் என்னைக் கண்டவர்கள் தடி யினுல் அடித்துத் துரத்த நான் பயந்து குரைத்துக் கொண்டு ஆலயத்தை வலமாக சுற்றி வந்து பலிபீடத்தின் அருகில் வந்து சிவலிங்கத்தைப் பார்த்தேன். அன்று சிவராத்திரி யானதால் கிடைத்தற்கரிய சுடரினையுடைய தீபஆராதனை முதல் சில ஆராதனை செய்வதை என் பாவமெல்லாம் நீங்கும்படிக் கண்டேன். அவ்வளவில் ஒருவன் வில்லை வளைத்து கொடிய பாணத்தைப் பூட்டி எய்ய என் மேல் தைத்த உடன் நான் இறந்தேன். அவ்வாறு இறக்கும் காலத்தில் பிரதோட காலமாகிய அந்திப் பொழுதில் செய்யும் சோட சோபசாரங்களில் ஒன்ருகிய அரிய சுடர் தீபமேந்திய பூசா காலத்தில் நான் தரிசித்ததாலும் அந்த ஆலயத்தை வலமாக வந்ததாலும் நெடிய வேலாயுதத்தை உடைய அரசனுகப் பிறந்தேன். இவ்வாறு பிறந்ததிலும் மூன்று காலங்களையும் அறிந்தவனுனேன்' என்று கூறிப் பின் பிறந்து ஆட்சி செய்யும் பிறவிகளையும் எடுத்துச் சொல்லு கிருன். இதன் விரிவெல்லாம் பிரமோத்தர காண்டம் என்ற நூலில் காணலாம்.

சிவராத்திரி தரிசனம் உலகத்தில் இழிவுள்ள செந்து வாகிய நாயாகிப்பிறந்தார்க்கும் நன்மைசெய்தது. நமக்கும் இத்தகைய அரச போகத்தை அனுபவிக்கத்தக்க நல்வினைப் பயனைக் கொடுத்ததென்று கண்டுகொண்டு வாழ்தல் நலம். இந்தப்பிறப்பிலும் மாதாமாதம் வருகின்ற பூர்வபட்சம்,

அமரபட்சம் என்ற இருபட்சத்திலும் வரும் மாத சிவ ராத்திரிகளிலும், பதினுன்காம் திதியாகிய சதுர்த்தசி திதியில் மாசி மாதத்தில் பொருந்துகின்ற ம்கா சிவராத்திரி யிலும் மேன்மை மிக்க பூஜையும் சிவாலய தரிசனமும் பிறவிப் பெருங்கடல் நீந்தத் துணைசெய்யும். இறைவன் திருவடி நிழல் எய்தலாம் என்பதும் உறுதியாகும்.

சிவம்

உ

# பீஷ்மர் கூறிய அறி(ற)வுரைகள்

(தொகுத்தவர்: ஆக்னேயன்)

## தோற்றுவாய்

**ச்ருதி ஸ்ம்ருதி புராணானும் ஆலயம் கருணாலயம் |**
**நமாமி பகவத் பாதம் சங்கரம் லோகசங்கரம் ||**

ஆதிசங்கர பகவத் பாதர்களைத் துதிக்கின்ற எண்ணற்ற துதிகளுள் மேலே காட்டியுள்ளது மிகவும் பிரசித்தமானதும் பெரும்பாலோர் அறிந்ததுமாகும். ஆதிசங்கரர் ச்ருதி, ஸ்ம்ருதி, புராணங்கள் ஆகியவற்றின் உறைவிடம்; அவர் கருணைக்கு இருப்பிடம்; அத்தகைய உலகத்துக்கு நன்மை செய்யும் சங்கரரான பகவத்பாதரை வணங்குகின்றேன் என்பது இந்த ச்லோகத்தின் பொருளாகும். புராணங்கள் உபலக்ஷணமாக இதிஹாசங்களையும் குறிக்கும். இதிஹாஸ புராணங்கள் என்று இரண்டையும் சேர்த்துச் சொல்லுவதும் மரபாகும். எனவே புராணங்களுக்கு உறைவிடமான ஆதிசங்கரர் இதிஹாஸங்களுக்கும் உறைவிடமாவர் என்பதில் ஐயம் இல்லை. எனவே ஆதிசங்கர பகவத்பாதரின் நினைவைக் கொண்டாடுகின்ற இந்த புத்தக மலரில் இதிஹாஸங்களில் ஒன்றான மஹாபாரதத்திலிருந்து இந்தப் பகுதியைத் தொகுத்துச் சிறியேன் இங்கே தந்துள்ளேன். எனது சொற்கள் சிறப்பிலவேனும் அவைகளால் தெரிவிக்கப்படும் பொருளின் சிறப்பு நோக்கி பெரியோர்கள் இவைகளை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று மிகவும் பணிவன்புடன் வேண்டிக் கொள்கின்றேன்.

## பீஷ்மரும் தருமரும்

மாபாரதப் போரில் பீஷ்மர் தருமருக்கு எதிராகத் துரியோதனன் பக்கம் நின்று போராடினர். பாண்டவர்கள் பக்கமே நியாயம் உள்ளது என்று முழுமையாக அறிந்தும் அவர் துரியோதனனுக்காகத் தன் முழு ஆற்றலுடன் போரிட்டார். ஆயினும் ஈசனருள், தர்மம், கிருஷ்ணன் உதவி ஆகியவை பாண்டவர் பக்கம் இருந்தமையால் பாண்டவர்களே வெற்றி பெற்றனர். பீஷ்மர் போரில் அடிபட்டு வீழ்ந்தும் தாம் விரும்பிய போதே மரணத்தை ஏற்றுக் கொள்ளும் வரம் பெற்றவராகலின் உத்தராயணத்திலேயே மரணமடைய வேண்டுமென்னுங் கருத்துடன் அக்காலத்தை எதிர் நோக்கி அம்புப் படுக்கையில் படுத்திருந்தார். போர் முடிந்தது. தருமபுத்திரர் வெற்றி பெற்று முடிசூட வேண்டியவரானுர். முடிசூடிய பின் கிருஷ்ணனுடைய ஏற்பாட்டின்படி பீஷ்மரிடமிருந்து அறி(ற)வுரைகளைக் கேட்பதற்காகச் சென்றார் யுதிஷ்டிரர் எனப்படும் தருமபுத்திரர்.

பீஷ்மர் தருமபுத்திரருக்கு உபதேசித்த அறிவுரைகள் மாபாரதத்தில் சாந்திபருவம், அனுசாசன பருவம் ஆகிய இரு பருவங்களில் வருகின்றன. இவற்றில் முதலாவதான சாந்தி பருவத்தில் ராஜதருமம், ஆபத்துத் தருமம், மோக்ஷ தருமம் ஆகிய மூன்றும் சொல்லப்பட்டுள்ளன. இவற்றுள் மோக்ஷ தருமத்தைப் பிறிதொரு சமயம் சொல்லுவோம். எஞ்சியுள்ள ராஜ தருமம், ஆபத்துத் தருமம் ஆகிய இரண்டும் நமது மலரின் நோக்கத்துக்கு அப்பாற்பட்டதாகையால் அவைகளை ஈண்டுக் கூறவில்லை. இரண்டாவதான அனுசாசன பருவத்தில் எல்லா மனிதர்களும் கைகொள்ள வேண்டிய பொதுவான தருமங்கள் கூறப்பட்டு உள்ளன. அவற்றில் சிலவற்றைத் தொகுத்து அடியேன் ஈண்டுக் கொடுக்கின்றேன். குற்றங்களைந்து குணங்களை மட்டுமே கொள்க என வேண்டிக் கொள்கின்றேன்.

## 1. வினைப்பயன்

சாந்தி பருவத்தில் கூறியபடி அரசதருமம், ஆபத்துத் தருமம், மோட்சதருமம் ஆகிய மூன்றையும் பீஷ்மர் தரும புத்திரருக்கு உபதேசித்தார். பின்னர், தருமபுத்திரர் அம்புப் படுக்கையில் பல காயங்களுடன் படுத்திருக்கும் பீஷ்மரைப் பார்த்து மனம் வருந்தினார். பீஷ்மரது இந்த நிலைக்குத் தாமே காரணம் என மனம் நொந்து அவரிடம் வருத்தத்துடன் கூறினார். தருமபுத்திரரைச் சமாதானம் செய்து அனைத்துக்கும் காரணம் வினைப்பயனே என விளக்கப் பின்வரும் கதையைக் கூறினார் பீஷ்மர்.

கௌதமி என்ற பெயருள்ள ஒரு கிழவி முன்னொரு காலத்தில் இருந்தாள். அவள் மிகவும் அடக்கமும், பொறுமையும், மற்ற நற்குணங்களும் நிரம்பியவள். ஒரு சமயம் அவளது மகனைப் பாம்பு ஒன்று கடித்தது. அதனால் அந்த மகன் மாண்டான். இதையறிந்தும் கிழவி, பாம்பினைப் பிடித்து அடித்துக் கொல்லும் முயற்சியில் ஈடுபடாது வாளாவிருந்து விட்டாள். அர்ஜுனகன் என்ற பெயருள்ள வேடன் ஒருவன் கௌதமியின் மகனைக்கடித்த பாம்பைப் பிடித்துக் கொண்டு அவளிடம் வந்தான். "அம்மா, உன் மகனைக் கொன்ற பாம்பினைப் பிடித்துவந்து விட்டேன். இதனை எப்படிக்கொல்ல வேண்டும் என்பதனை நீ சொல்வாயாக, இதனைத் தீயில்போடலாமா அல்லது துண்டுதுண்டாக வெட்டிவிடலாமா என்பதைச் சொல். இந்த பாம்பை உயிருடன் விட்டுவைத்தல் கூடவேகூடாது" என்று அந்த வேடன் கிழவியிடம் கேட்டான்.

"வேடனே! நீ கூறுவது சரியல்ல. என்மகன் இறந்ததற்குக் காரணம் விதியேயாகும் இந்தப்பாம்பு காரணமல்ல. பாம்பைக் கொல்வதனால் என்மகன் உயிர் பெற்று எழப்போவதும் இல்லை. மேலும் இப்பாம்பு உனக்கு ஒரு தீங்கும் செய்யவில்லையே. அதனை நீ கொல்ல எண்ணுவது

அறிவுடைமை ஆகாது'' என்று கௌதமி பதிலளித்தாள். இதனைக்கேட்ட வேடன் ''தாயே, நன்மை தீமை அறிந்த பெரியோர்கள் பிறரது துன்பங்களைக் கண்டு வருந்துவார்கள். எனவே இரக்க நெஞ்சுள்ள நீ வருந்தாதே. நான் இந்தப் பாம்பைக் கொல்லத்தான் போகிறேன்'' என்று கூறினன்.

''அப்பா, விதியின் விளைவால் என் புதல்வன் இறந்து போனன். அதன் பொருட்டு இந்தப் பாம்பைக் கொல்ல எனக்கு உரிமை இல்லை. கோபத்தை விட்டுவிடு, இந்தப் பாம்பையும் விட்டுவிடு'' என்று கூறினள் கிழவி.

''துஷ்டர்களைக் கொன்ருல் புண்யம்தான் ஏற்படும். இந்த ஒரு பாம்பைக் கொல்வதனுல் அனேக உயிர்களைக் காப்பாற்ற முடியும். ஆகவே இதைக் கொல்வதற்கு எனக்கு அனுமதி கொடு'' என்று வற்புறுத்தினன் வேடன்.

''இந்தப் பாம்பைக் கொல்வதினுல் என் புதல்வன் உயிர் மீளப்போகிறதா? ஆகவே நீ அதனைக் கொல்லாமல் விட்டுவிடு'' என்று மீண்டும் மீண்டும் வேண்டினுள் கௌதமி. வேடனே கௌதமியின் வேண்டுகோளைப் புறக்கணித்து அந்தப் பாம்பைக் கொல்வதற்கு முயன்ருன். இதைப் பார்த்த பாம்பு வேடனிடம் மெல்லிய குரலில் பேசிற்று. ''அர்ஜுனகா! யமனுடைய கட்டளையால்தான் இந்தச் சிறுவனைத் தீண்டி நான் கொன்றேன். இந்த விஷயத்தில் என் தவறு ஏதுமில்லை. எனது உணவுக்காக நான் கொல்லவில்லை. குற்றம் யமனையே சாரும்'' என்று கூறியது.

''ஏ! பாம்பே! பிறர் ஏவியபடி செய்தாலும் நீ குற்றவாளிதான். பாபியான உன்னைக் கொல்லாமல் விடக்கூடாது.'' என்று வேடன் கூறினன். உடனே அந்தப்பாம்பு ''வேடனே, நீ கூறுவது சரியல்ல. இந்தக் குற்றம் ஏவினவனைச் சாரவேண்டும், அல்லது எங்கள் இருவரையும் சாரவேண்டும். ஒரு குற்றத்துக்கு இருவர் காரணமாக இருக்கும்

போது ஒருவரை மட்டும் சிக்ஷிப்பது தவறாகும்.'' என்று பதிலளித்தது. வேடனோவெனில் "ஏவினவன் இருப்பினும் நீயே கொன்றாயாகையால் உன்னைக் கொல்லத்தான் வேண்டும்.'' என்று உறுதியாய்ச் சொன்னான்.

இந்த சமயம் யமன் அங்கே வந்தான். வந்து பாம்பை நோக்கி, 'ஏ பாம்பே! குழந்தையின் மரணத்துக்கு நீயோ அல்லது நானோ காரணம் அல்லர். காலத்துக்கு வசப் பட்டே நான் உன்னை ஏவினேன். உலகில் யாவும் காலத் துக்குக் கட்டுப்பட்டே நடக்கின்றன'' என்று சொன்னான். இவ்விதம் குழந்தை இறந்ததற்கு யார் பொறுப்பு என்று பாம்பு, வேடன், யமன் ஆகிய மூவரும் சர்ச்சை செய்து கொண்டிருந்த போது காலதேவன் அங்கே தோன்றி, வேடனை நோக்கி, "குழந்தை இறந்ததற்கு நானோ, யமனோ, பாம்போ காரணம் இல்லை. குழந்தையின் கர்ம வினையே இதற்குக் காரணம் என்று தெரிந்து கொள். ஒவ்வொரு வரும் தாம் செய்த வினைகளின் பயனை அவரவர் அனுபவி யாமல் தீராது. எனவே குழந்தை இறந்ததற்கு அவனது வினையே காரணம்'' என்று உணர்த்தினான்.

இந்தக் கதையைக் கூறி, "பாண்டவ சிரேஷ்டனே! காலதேவனது வார்த்தையால் தெளிவு பெற்று ஆறுதல் அடைந்து அந்தப் பாம்பை வேடன் கொல்லாமல் விட்டு விட்டான். அது போல, போரில் நேர்ந்த அழிவிற்குக் காரணம் நீயே என்று வருந்தாமல் தெளிவு பெற்று நீயும் ஆறுதல் அடைவாய் என்று பீஷ்மர் தருமபுத்திரைத் தேற்றினார். தருமபுத்திரரும் ஒருவாறு ஆறுதல் அடைந் தார்.

## 2. ஊழ்வினையா? முயற்சியா? எது பெரிது?

அடுத்து, பீஷ்மரை நோக்கி யுதிஷ்டிரர், "பிதாமஹரே! ஊழ்வினை, முயற்சி இவ்விரண்டில் எது அதிக வலிமை உடையது?'' என்று கேட்டார். பீஷ்மர் இதற்குப் பதில்

அளிக்கும் வகையில் முன்னொரு சமயம் பிரம்மதேவர் வசிஷ்டருக்குக் கூறியதை யுதிஷ்டிரருக்குக் கூறினார். அதன் சுருக்கம் வருமாறு: ஒரு விதையிலிருந்து இலை, காம்பு, கிளை, மலர், காய், கனி, இவைகள் உண்டாகின்றன. கனியிலிருந்து விதையுண்டாகிறது. விதையிலிருந்து மீண்டும் முளை, இலை முதலியன உண்டாகின்றன. நன்கு ஆராய்ந்து பார்க்குமிடத்து, விதையிலிருந்தே விதை உண்டாகிறது என்பது புலனாகிறது. நல்ல விதையாயிருப்பின் நல்ல பயனும், கெட்டதாயிருப்பின், கெட்ட பலனுமாக இருக்கிறது. அதைப் போலவே நல்வினை நல்ல பயனையும், தீவினை தீய பயனையும் தருகின்றன. விதையும் நல்ல நிலத்தில் பயிர் இட்டால் தான் பலனைத் தருகிறது. அது போல ஊழ்வினையும் தகுந்த முயற்சியிருந்தால்தான் பயனைத் தருகிறது. இவ்வகையில் பூமியை முயற்சியாகக் கொண்டால் ஊழ்வினையை விதை என்று கொள்ளலாம். நிலமும், விதையும் சேர்ந்தே பயிருண்டாவதைப் போல முயற்சியும் ஊழ்வினையும் ஒன்று சேர்ந்தால் தான் பலன் கிடைக்கும். முயற்சியில்லாதவனுக்கு வெறும் அதிர்ஷ்டத்தினால் மட்டும் எதுவும் கிட்டாது.

நெருப்பு மிகச் சிறியதாயிருந்தாலும் காற்றின் உதவியால் அது பெரிதாவது போல முயற்சி உடையவனுக்குத் தெய்வமும் உதவுகின்றது. எண்ணெய் ஊற்றாது போனால் விளக்கு எரியுமா? முயற்சி அற்றவனுக்கு தெய்வம் அருள் புரியுமா? எனவே விடாமுயற்சியுள்ள மனிதன் தெய்வத்தின் அருளையும் பெற்று மேன்மை அடைவான்.

## 3. கருணையின் சிறப்பு

முயற்சிக்கும் ஊழ்வினைக்கும் உள்ள சம்பந்தத்தைப் பீஷ்மபிதாமஹர் கூறிய பிறகு, கருணையின் சிறப்பையும், மேன்மையையும் பற்றித் தெரிந்து கொள்ள யுதிஷ்டிரர் விரும்பினார். அதற்கு ஒரு கதையைச் சொல்லி பீஷ்மர் விளக்குகிறார். அக்கதை பின்வருமாறு :

ஒரு காட்டில் கொடிய விஷம் தோய்ந்த அம்பினுல் ஒரு மரம் தாக்கப்பட்டு இலைகளும், காய்களும் உதிர்ந்து பட்டுப் போயிற்று. நீண்டகாலமாக ஒரு கிளி அந்த மரத்தின் பொந்தில் வசித்து வந்தது. அந்தக் கிளிக்கு அந்த மரத்தின் மீது இருந்த பற்றுதல் காரணமாக மரம் உலர்ந்து பட்டுப் போன பிறகும் அதைப் பிரிய கிளிக்கு மனம் வரவில்லை. இரை தேடவும் வெளியில் புறப்படாமல் அந்த மரத்திலேயே தங்கி இரையின்மையால் அந்த மரத்தைப் போலவே தானும் உலரத் தொடங்கியது. களைப்பும் சோர்வும் அதிகரித்தது. அதன் குரல் தடுமாறியது. ஆறறிவு படைத்த மனிதருக்கும் அரியதான இந்த மேன்மையுள்ள நடத்தையைக் கண்டு இந்திரன் வியப்புற்று, இந்தக் கிளிக்கு இத்தகைய கருணை எவ்வாறு வந்தது என்று எண்ணலானுன். பிறகு, ஒரு அந்தணனைப் போல வேடந்தாங்கி, நிலவுலகை அடைந்து அந்த மரத்தை அடைந்தான். அடைந்து, அந்தக் கிளியினை நோக்கி, "ஏ கிளியே! இந்த உலர்ந்துபோன மரத்தினை நீ விட்டுவிடாமல் இன்னும் ஏன் ஒட்டிக் கொண்டிருக்கிருய்?" என்று கேட்டான். இவ்வாறு கேட்ட இந்திரனைக் கிளி நல்வரவு கூறி மரியாதை செய்து வணங்கியது. தனது தவத்தினுல் அவனை அறிந்து கொள்ளும் பேறு பெற்றதாகக் கூறியது. கிளியின் இந்த வார்த்தைகளைக் கேட்ட இந்திரன் அந்தக் கிளியின் அறிவைப் பெரிதும் பாராட்டி தன் மனத்துக்குள்ளே கொண்டாடினுன். பின்னர், "ஏ கிளியே! கனிகளும், இலைகளும் இல்லாது, உலர்ந்து போயிருக்கும் இந்த மரத்தில் இனி எந்தப் பறவையும் வசிக்க முடியாதே! அங்ஙனமிருப்பினும், நீ இந்த மரத்தில் தொடர்ந்து வசித்து வரும் காரணமென்ன?" என்று கேட்டான்.

இந்திரன் இக்கேள்வி கேட்டதும், கிளி மிகவும் வருந்தியது. பெருமூச்சு விட்டது. துயரம் மேலிட, அது இந்திரனைப் பார்த்து, "தேவராஜனே! கேட்பீர், இந்த மரத்தில் தான் நான் பிறந்தேன், வளர்ந்தேன். இந்த மரம்தான்

இளமைப் பருவத்தில் என்னைக் காப்பாற்றியது. எனக்குப் பகைவர்களிடமிருந்து பாதுகாப்பு அளித்தது. இன்று இந்த மரம் உலர்ந்து போனாலும் அதன்பால் அன்பு செலுத்தி இங்கே நீடித்து இருக்க விரும்பும் என்னை வேறிடத்திற்குச் செல்லுமாறு என்னை நீர் தூண்டுவது உமக்குப் பெருமை அளிக்குமா? எனது பிறவி கடைத்தேறும் வழியையல்லவோ நீர் எனக்குக் கூறவேண்டும்! உபகாரம் செய்தவர்களிடம் அன்போடு நடப்பதுதானே நியாயம். இந்த மரம் நல்ல நிலையிலிருந்த போது, இதனை அடுத்திருந்த நான், இதற்கு இப்போது அவல நிலை ஏற்பட்டதும் இதனைப் பிரிந்து செல்வது நியாயமா?'' என்று பதில் சொல்லிற்று.

கிளியின் இந்த நேர்மையான பதிலைக் கேட்ட இந்திரன் அகமகிழ்ந்து தருமம் தெரிந்த அந்தக் கிளியை மிகவும் பாராட்டினான். ''வேண்டிய வரத்தினைக் கேள், தருகிறேன்'' என்றான். ''இந்த மரம் மீண்டும் செழித்து வளர வேண்டும்'' என்ற வரத்தைக் கிளி வேண்டியது. கிளியின் சீலமும், அன்பும் இந்திரனை வியப்பில் ஆழ்த்தியது. உடனே அந்த மரத்தின்மீது அமிர்தத்தினைப் பொழிந்து அதனை இலையும், கனியும், கிளைகளும் நிரம்பியதாகச் செய்தான். மிக்க மகிழ்ச்சியடைந்த அந்த கிளி நீண்டகாலம் அந்தமரத்தில் வசித்து, பின்னர் தேவருலகம் சேர்ந்தது.

''பாண்டுவின் மைந்தனே! பிறரது வாட்டத்தினைக் கண்டு எவன் இந்தக் கிளியைப் போல் பரிவு காட்டுவானோ அவனே மேன்மை அடைதற்குரியவன்'' என்று பீஷ்மர் தருமபுத்திரருக்கு உபதேசம் செய்தார்.

## 4. பூதானம்

''தானங்களுள் சிறந்த தானம் எது? என்று யுதிஷ்டிரர் கேட்ட கேள்விக்கு பீஷ்மர் கூறிய பதில் :

''எல்லா தானங்களைவிட பூதானமே மேம்பட்டது. அசைவு அற்றதும், அழிவற்றதும், உயர்ந்த போகங்களை

நல்குவதும், ஆடைகள், அணிகலன்கள், தானியங்கள் முதலியவற்றைத் தருவதான பூமியை தானம் செய்பவன், பூமி நிலைத்திருக்கும் வரை அவனும் செல்வத்தோடு இருப்பான். பூதானம் செய்தால் கொடியவனும் திருந்தி விடுவான். தானம் பெறுபவனைத் திருத்தி நல்வழிப் படுத்தும் சக்தி பூமிக்கு உண்டு. பூதானத்தினுல் தானம் செய்பவனும், தானம் பெறுபவனும் ஒருங்கே மேன்மை அடைகிருர்கள். பூமியை தானம் கொடுப்பவன் பொன், வெள்ளி, துணிமணிகள், தானியம் ஆகிய அனைத்தையும் தானம் செய்யும் பலனைப்பெறுகின்ருன்.

பாலைச் சுரந்து கொண்டு ஒரு பசு தன் கன்றை நோக்கி ஓடுவது போல பூதானம் செய்தவனை பூமி தேவி தேடிக் காப்பாற்றுகிருள். மனிதர்கள் பூமியில் பிறக்கின்றனர். பூமியில் இறக்கின்றனர். பூமியே உலகிற்குத் தந்தையும்; தாயும் ஆகிறது. பூமிதானம் சம்பந்தமாக முன்பு இந்திரனுக்குப் பிரஹஸ்பதி கூறியதையும் உனக்குக் கூறு கிறேன் கேள்'' என்று பீஷ்மர் பின்வருமாறு கூறினுர்.

''பூமி தானத்தைக் காட்டிலும் சிறந்த தானம் வேறு ஒன்றுமில்லை பூமிதானம் செய்தவன் குளம், ஏரி, கிணறு இவற்றையும் மற்றும் மருந்துகள், கனிகள், மரங்கள், காடுகள், கற்கள் ஆகியவையையும் கொடுத்தவனுகின்ருன். தண்ணீர் மீது விட்ட எண்ணெய்த் துளி விபாபித்துப் பரவுவது போல பூமிதானத்தின் புண்ணியம் பயிருக்குப் பயிர் வளர்ச்சியடைகிறது. தாய்க்கு ஒப்பான ஆசான் இல்லை. சத்தியத்திற்குச் சமமான தர்மம் இல்லை. தானத் திற்கு ஈடான புதையல் இல்லை. அதே போல பூமி தானத் திற்கு நிகரான தானமும் இல்லை.''

பூமிதானத்தின் சிறப்பைப் பிரஹஸ்பதியின் வார்த்தை களைக் கொண்டு இவ்வாறு பீஷ்மர் விளக்கினுர்.

## 5. அன்னதானம்

"எந்த தானம் கொடுத்தவுடனேயே பெறுபவருக்கு முழு திருப்தியைக் கொடுக்கிறது? எந்த தானம் இம்மை, மறுமை இரண்டிற்கும் பயன்படக் கூடியது?" என்று அறிய விரும்பிய தருமபுத்திரருக்கு முன்னர் தனக்கு இது விஷய மாக நாரதர் உபதேசித்ததைப் பீஷ்மர் கூறினர். அதன் சுருக்கம் பின்வருமாறு.

"உணவு கிடைப்பது குறித்தே இவ்வுலக வாழ்வு அமைந் துள்ளது. அன்னதானத்தைக் காட்டிலும் வேறு சிறந்த தானம் இல்லை. அன்னம் உயிரைப் பாதுகாக்கும். உடலுக்கு பலத்தைக் கொடுக்கும். அன்னம் தேவைப்படாதவனே கிடையாது, ஆகையால் பசியால் வருந்தி தன் வீட்டைத் தேடிவந்தவனுக்கு இல்லறத்தான் அவசியம் உணவு கொடுக்க வேண்டும். உண்டி கொடுத்தவன் உயிர் கொடுத் தவனே ஆவான். மற்ற தானங்களின் பலன் கண்ணுக்குத் தெரியாமல் போகலாம். ஆனல் அன்னதானத்தின் பலனை கண்கூடாகக் காணவியலும். அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கையும் அன்னதானத்தினல் பெறலாம். நோய்கள் அகலுகின்றன. இன்பம் உண்டாகிறது. சந்ததி விருத்தி ஏற்படுகிறது. எவ்வளவு பலம் உடையவனயிருப் பினும் கூட உணவு கொள்ளாவிட்டால் அவனுடைய பலம் சிறிது சிறிதாக அழிந்து போய்விடுகிறது.

அன்னம் இல்லாவிட்டால் ஒருவரை ஒருவர் மதிக்க மாட்டார்கள், மூன்று உலகங்களுக்கும் அன்னம் தான் பிரதானம். 'அன்னதாதா ஸுகீபவ' என்று வாழ்த்திக் கொண்டாடப் படுவான். அன்னதானம் செய்கிறவன் உயிரையும், ஆற்றலையும் கொடுக்கின்றன். அதனல் உலகம் மேன்மையை அடைகிறது.

அதனல் அன்னதானம் செய்து மேலான உலகங்களை அடைவாய்" என்று பீஷ்மர் அறிவுறுத்தி அருளினர்.

## 6. மாதர் நல்லொழுக்கம்

மாதரின் நல்லொழுக்கம் எத்தகையதாயிருக்கும் என்பதைத் தெரிந்துகொள்ள ஆசைப்பட்ட தருமபுத்திரருக்கு முன்னொரு சமயம் சுமனை என்ற கேகயநாட்டு அரசன் புதல்விக்கு சாண்டிலி என்ற பெண்மணி கூறிய வார்த்தைகளைக் கொண்டு பீஷ்மர் விடை கூறினர்.

சாண்டிலி கூறியதன் சுருக்கம் : ஒரு பெண் தனது கணவனுக்கு வேண்டாத கடுஞ்சொற்களை ஒரு போதும் கூறக்கூடாது. மாமனர், மாமியார் ஆகியோர்க்கு அடங்கி நடக்கவேண்டும். கோள் சொல்லக் கூடாது நெடுநேரம் யாரோடும் பேசிக்கொண்டிருக்கக் கூடாது. கணவன் சொன்ன ரகசியங்களை யாரிடமும் கூறக்கூடாது. வேலையாக வெளியில் சென்ற கணவர் வீட்டிற்குத் திரும்பியதும், அவருக்கு மரியாதை செலுத்தி உபசாரம் செய்ய வேண்டும். கணவருக்குப் பிடிக்காத உணவை மனைவி உண்ணக்கூடாது. அதிகாலையில் எழுந்து குடும்பக்காரியங்களை கவனிக்க வேண்டும். ஏதேனும் ஒரு காரியத்தை முன்னிட்டு கணவர் வெளியூர் செல்லுவாரேயானுல் அவர் வெற்றியுடன் திரும்ப தெய்வத்தினை ஆராதிக்கவேண்டும். கணவர் வெளியூர் சென்றுள்ள காலங்களில் அலங்காரம் செய்து கொள்ளக்கூடாது. முக்கியமான காரியமாக இருந்தாலும் அயர்ந்து தூங்கும் கணவரை எழுப்பக்கூடாது. மிகுந்த பொருளைத் தேடும்படி கணவருக்கு ஒருபோதும் தொந்தரவு கொடுக்கக்கூடாது. 'வீடுவாசல்களை சுத்தமாக வைத்து எப்போதும் லக்ஷ்மீகடாக்ஷம் பெருகும்படி வைத்திருக்க வேண்டும்.

இவ்வாறு சாண்டிலியின் வார்த்தைகள் மூலம் மாதரின் நல்லொழுக்கத்தை பீஷ்மபிதாமஹர் யுதிஷ்டிரருக்கு விளக்கியருளினுர்.

## 7. நல்லோர் தீயோர் நடத்தைகள்

"பிதாமஹரே! நல்லவர் தீயவர் இவர்களது நடத்தைகளைத் தாங்கள் விளக்கிக் கூறவேண்டும்" என்று கேட்ட யுதிஷ்டிரருக்குப் பீஷ்மர் கூறியதாவது:—

"பாண்டவ சிரேஷ்டனே! தீயவர்களின் சொல்லும் செயலும் எப்பொழுதும் கொடியனவாய் இருக்கும். கட்டுப்பாடு என்பதை அவர்களிடம் காணமுடியாது. அவர்களைக் கட்டுப்படுத்துவதும் கடினமாயிருக்கும்.

நல்லவர்களின் நடத்தை எப்படியிருக்கும் என்பதைக் கூறுகிறேன் கேள்:— முக்கியமான சாலைகளிலும், பசுக்களின் நடுவிலும், நெல் வயலின் மத்தியிலும் நல்லவர்கள் ஜலமலம் கழியார். முதியவர்கள், சுமை தூக்கி வருபவர்கள், பெண்கள் நோயாளர், சிறுவர், பசுக்கள், அந்தணர், அரசர் ஆகியோருக்கு வழிவிடுவார்கள். தான் மட்டும் தனித்து சிறந்த உணவை உண்ணமாட்டார்கள். விருந்தினர்கள், சுற்றத்தார் ஆகியோருக்கும் ஒரே உணவை அளிப்பார்கள். உண்ணும்போது பேசமாட்டார்கள். ஈரக்கையோடு தூங்க மாட்டார்கள். அடைக்கலம் புகுந்தவர்களுக்கு அபயமளித்துக் காப்பாற்றுவார்கள்.

காலை, மாலை இருவேளைகளில் மட்டும் உணவு கொள்வார்கள். இப்படி உணவு உட்கொள்வது உபவாசம் இருப்பதற்குச் சமம். அன்னிய நாட்டில் வசித்தாலும் சொந்த நாட்டில் வசித்தாலும் விருந்தினரை உபசரிக்காமல் இருக்க மாட்டார்கள். வயது முதிர்ந்தவர்களை அவமதிப்பதோ அல்லது வேலைகளில் ஏவுவதையோ செய்ய மாட்டார்கள். வயது முதிர்ந்தவர்கள் நின்று கொண்டிருக்கும் பொழுது தாங்கள் உட்கார மாட்டார்கள். சொல்சுத்தம், மனச்சுத்தம் ஆகிய இருவகை சுத்தத்தினையும் பெற்றிருப்பார்கள். காலை, மாலை இருவேளைகளிலும் பெரியோர்களை அடுத்து

அவர்கள் செய்யும் உபதேசங்களைக் கேட்பார்கள். பெரியோரை அடுத்துப் பழகுவது பல நூல்களைக் கற்பதற்குச் சமமாகும். ஆகவே எப்போதும் பெரியோர்களையே அடுத்துப் பழகுவார்கள். புலனடக்கம், மன அடக்கம் ஆகிய இரண்டையும் எப்பொழுதும் பயின்று வருவார்கள். எத்தகைய ஆபத்து வந்தாலும் பெரியோர்களை மரியாதை குறைவாகப் பேசமாட்டார்கள். சந்தர்ப்ப வசத்தினால் ஏதேனும் பாவம் செய்ய நேரிட்டாலும், அதை மறைத்து மேலும் பாவங்கள் வளர வழிகோலாது, அதைச் சான்றோர் இடம் தெரிவித்து பாபத்திற்கு நிவர்த்தி தேடிக் கொள்வார்கள். தருமத்திற்குச் சாதனம் என்று கருதியே பொருள்களைத் தேடுவார்கள். தருமமே மேன்மைக்குக் காரணம் என்று எப்பொழுதும் தருமம் செய்வார்கள், ஆனால் அதை விளம்பரம் செய்யமாட்டார்கள்''. இவ்வாறு நல்லோரது நடத்தையைப் பற்றிப் பீஷ்மபிதாமஹர் யுதிஷ்டிரருக்குக் கூறியருளினார்.

## 8. முடிவுரை

இவ்வாறு பீஷ்மர் யுதிஷ்டிரருக்கு உபதேசித்த பல அரிய தருமங்கள் இந்த அனுசாசன பருவத்தில் உள்ளன. சிவ ஸஹஸ்ரநாமம், விஷ்ணு ஸஹஸ்ரநாமம் ஆகியவைகளும் இப்பகுதியில் தான் உள்ளன. இவைகளையெல்லாம் உபதேசித்த பின்னர் உத்தராயணம் வந்ததும் தம்மிடம் வருமாறு பீஷ்மர் கூறி யுதிஷ்டிரருக்கும் அவருடன் வந்த ஏனையோருக்கும் விடைகொடுத்தார்.

பின்னர் உத்தராயணம் வந்ததும் பீஷ்மர் குறிப்பிட்ட காலத்தில் யுதிஷ்டிரரும் கண்ணனும் மற்றும் திருதராஷ்டிரன் முதலானோரும் அவரிடம் வந்து சேர்ந்தனர். செய்ய வேண்டிய தானதருமங்களையெல்லாம் செய்து முடித்த பின்னர் பீஷ்மர் இந்த நிலவுலகைப் பிரியத் தயாராகி விட்டார். அவரது தலையைப்பிளந்துகொண்டு ஆத்மா ஆகாயத்தை நோக்கிச் சென்றது. சந்தனுவின் புத்திரரான பீஷ்மர் வசுக்களின் உலகைச் சென்றடைந்தார். சுபம்.

உ

# புருஷார்த்தப்ரபோதம்

தர்ம ப்ரவசனரத்னம், உத்தம உபன்யாசக சக்ரவர்த்தி
பிரம்மஸ்ரீ மஞ்சக்குடி K. ராஜகோபால சாஸ்திரிகள்.

यस्याज्ञया जगत् स्रष्टा विरिंचिः पालकोहरिः ।
संहर्ता कालरुद्राख्यो नमस्तस्मै पिनाकिने ॥

यस्मात् सर्वं समुत्पन्नं चराचरमिदं जगत् ।
इद नमो नटेशाय तस्मै कारुण्यमूर्तये ॥

सौम्यं माहेश्वरं साक्षात् सत्यं विज्ञानमव्ययम् ।
वन्देसंसाररोगस्य भेषजंपरमंमुदा ॥

यस्य शक्तिरुमादेवी जगन्मातात्रयीमयी ।
तमहं शंकरं वन्दे महा माया निवृत्तये ॥

இவ்வுலகின்கண் பிறந்த ஆன்மகோடிகள் அழியாப்பதம் பெற வணங்கும் தெய்வம் ஒன்று உண்டு. அதைவணங்குவோம் என்று புருஷார்த்தப்ரபோதம் என்ற கிரந்தம் செய்த பிரும்மாநந்தபாரதிமுனிவர் பரமேச்வரனை வணங்குகிறார். எவருடைய ஆஞ்ஞையினால் இந்த ஜகத்தை பிரும்மாபடைத்தும் விஷ்ணு ரக்ஷித்தும் காலருத்ரர் ஸம்ஹாரம் செய்தும் இம்மூவரும் பரமேச்வரனை வணங்குகிறார்களோ அத்தகைய பெருமை வாய்ந்த பினாகபாணியை வணங்குவோம். (1) இவ்

வுலகே எவரிடமிருந்து தோன்றியதோ அந்த பரம கருண மூர்த்தியான நடேச மூர்த்தியை வணங்குவோம் (2) பரம கிருபையுடைய மஹேச்வரன்தான் சாக்ஷாத் ஸத்யம், விஞ் ஞானம், குறையில்லாதவர், என்று வேதம் கூறுகிறது. அவர் தான் நமது பிறப்பு இறப்பு என்ற வ்யாதிக்கு மருந்து கொடுப்பவர். (3) அந்த பரமேச்வரனுக்கு சக்தி உமா தேவியே ஜகத்திற்கு அம்மா. மூன்று வேதஸ்வரூபிணி. அந்த அன்னையுடன் கூடிய சங்கரனை நமது மாயை என்ற துன்பத்தை போக்க வணங்குவோம். (4)

உத்தம க்ரந்தமான புருஷார்த்தப்ரபோதத்தின் முன் கட்டுரையில் (1980 ஆண்டு மலரில்) பரம அத்வைத ரூபம் பரமேச்வரன்தான் என்று நிருபிக்கப்பட்ட விஷயம் சுருக்க மாகக்கூறப்பட்டது. இப்பொழுது ஒரு விதண்டாவாதி, பரமேச்வரனுக்கு எப்படி ஸர்வ உத்கிருஷ்டத்வம் வரும்? பரமேச்வரனை (எப்படி) ஸர்வஞ்ஞன் என்று சொல்ல முடியும்? அப்படி பரமேச்வரனை ஸர்வஞ்ஞன் என்று சொன்னால் எத்தனை எறும்பு, ஈ எத்தனை, எத்தனை அணுப் பூச்சி என்று சொல்ல முடியுமா? மேலும் பரமேச்வரன் ஸர்வகர்த்தா என்று சொன்னால் புண்ணியம் தர்மம் முதலியதுக்கு கர்த்தாபோல் பாபம் அதர்மத்திற்கும் அவரே கர்த்தாவாக இருக்கிறாரா? ஒருவர் ஸுகமாகவும் ஒருவர் துக்கப்படுபவராகவும் இருக்கிறார்களே. அதற்கும் அவரே கர்த்தாவானால் இது சிவனுக்கு அபகீர்த்தி அல்லவா? ஏன் உலகை படைக்கவேணும்? விளையாட என்று சொன்னால் சிவன் ஸாமான்ய குழந்தையா? அல்லது புத்திப்ராந்தியால் படைத்தாரா? என்று இப்படி எல்லாம் ஸந்தேஹப்படும் மனத்திற்குச் சமாதானம் ஸ்ரீ பாரதீ தீர்த்த முனிவர் புருஷார்த்தப்ரபோதத்தில் ஸந்தேஹ நிவர்த்தியைச் செய் கிறார்:—பகவான் ஸர்வக்ஞன், ஸர்வகர்தா, சர்வாந்தர் யாமி சிவபெருமான்தான். நம் போன்ற மனிதனுக்கு தெரி யாத சிறு நுட்பமான (எலக்டிரானிக்ஸ்) போன்ற காரியங் கள் சில மனுஷ்யர்களால் செய்யப்படுகின்றன. ஸர்வக்ஞனை

சிவபெருமான் கோஸ என்ற ஜீவனுக்கு இறக்கையையும் ஸ்ருஷ்டித்து அதன் நடுவே பல்லாயிரம் நரம்புகளையும் அதற்கு ரத்தம் ஸஞ்சாரம் செய்யும் முறையையும் படைத்திருக்கிறுர். நமக்குத் தெரியாதது வேறு ஒருவருக்குத் தெரியலாம் அல்லவா? அதுபோல் ஸகலமும் அறிந்தவர் சிவபெருமானே. அதனுல் அவர்ஸர்வக்ஞர் தான். படைப்பு என்பதும், மாயை என்ற ஒரு க்ருவி சிவபெருமானிடம் இருப்பதினுல் அது படைத்தது போன்ற தோற்றத்தைத் தான் காட்டுகிறது. எனவே பகவானிடம் இருக்கும் மாயையிடம் தான் இவ்வுலகம் இருக்கிறது. மாயையும் சிவ ஸான்னித்தியத்தினுல் செயல்படுகிறது. இந்த மாயைக்குள் கட்டுப்பட்ட ஜீவன் அனுதி அவித்யையினுல் துன்பப்படுகிறது. சிவ பூஜை, சிவபக்தி, சிவஞானத்தினுல் துன்பம் விலகிப்பேரின்பம் அடைகின்றது. எனவே ஸர்வசக்தனுன பரமேச்வரன் அருள் பாலித்து ஜீவனைக் கடைத்தேறும்படி செய்கிறுர்.

मायान्तु प्रकृतिं विद्यात् मायिनंतु महेश्वरम् ।
अस्यावयभूतैस्तु व्याप्तं सर्वमिदं जगत् ॥

மாயை என்பது ஈச்வரனுடைய ப்ரகிருதி. அதனுல் அவரை மாயீ என்று மஹேச்வரனை அழைக்கிறுர்கள். அவருடைய ஒரு அம்சம் தான் இவ்வுலகெல்லாம். அதனுல் தான் நாம் அரசு, நெல்லி, ஆல், மா போன்ற மரங்களையும், பசு, விருஷபம், யானை போன்ற மிருகங்களையும், பிராமணர் போன்ற மனுஷ்யர்களையும், மயில், கருடன் போன்ற பக்ஷிகளையும் பூஜை செய்கிறேம். இதையே ஸ்ரீ ருத்ரம் என்ற மஹாமந்திரம் "விருக்ஷேப்யோ ஹரி கேசேப்யோ நம:" பசூனும்பதயே நம:" என்றது போன்ற மந்திரங்கள் இவ்வுலகாகவே பரமேச்வரன் இருப்பதாகக் கூறுகிறது. வேதாந்தவாதிகளும் சிவபெருமான்தான் ஸர்வகாரணர், ஸர்வாதிகர் என்று கூறுவர்.

இவ்வுலகின் கண் மக்கள் கஷ்டம் ரொம்பவும் அடைந்து மனஸ்ஸமாதானம் இல்லாமலே இருந்து வருகிறார்கள். அதன் காரணம் மாயை தான் மனிதனை பல துன்பத்திற்கும் ஆளாக்குகிறது. அதைப் போக்க, பரமேச்வரனை பூஜிப்பது ஒன்று தான் புருஷன் செய்ய வேண்டிய கடமை. ஆனால் மனிதவர்க்கமோ துன்பம் போகவேணும் என்று நினைப்பதில் ரொம்பவும் பாராட்டுகிறது. துன்பம் போகும் வழியைச் சொன்னால் அது ரொம்பவும் லகுவாக இருந்தால் செவிகொடுத்துக் கேட்பார். அதற்கான பரிஹாரங்களை பெரியமுறையில் சொன்னால் அதைச் செய்யத் துணிவதில்லை. அதை கொஞ்சம் பொருளைக் கொடுத்து பரிஹாரம் செய்து உடல் நலத்தைப் பேணிக்காக்கவே பேராசைப்படுகிறது — கஷ்டப்படும் ஒருவரைப்பார்த்து நீங்கள் இந்த ஆலயத்தில் போய் சிவபெருமானை வழிபாடு செய்து ப்ரதக்ஷிண நமஸ்காரங்களினாலும் அர்ச்சனை நிவேதனாதிகளாலும் ப்ரார்த்தனை செய்வதாலும் பரிஹாரம் ஆகும் என்று நாம் சொன்னால் அவர் அது கேட்டு "ஸார், இதுவெல்லாம் நமக்கு ஒழியாது" பத்துரூபாய் பணத்தை கொடுத்து நீங்களே இதைச் செய்து அந்தபலன்களை எனக்கு கொடுங்கள் என்பார். இவருக்கு நாம் என்ன பண்ண முடியும்? இதுதான் இன்றய நிலை. மனிதன் துன்பத்திலிருந்து விலக சிவபெருமான் ஒருவர் தான் அருள்பாலிப்பார். இத்தகைய பெருமை வாய்ந்த சிவத்தை தியானம் செய்ய வேண்டும்.

ध्यानयज्ञ फलोमर्त्यः शिवएव न चापरः ।
ध्यानयज्ञस्य निष्ठस्य नकिंचिदपिदुर्लभम् ॥

தியானயக்ஞம் என்ற யக்ஞத்தினால் சிவத்தை தியானம் செய்து உள்ளத்தில் நிறுத்தினால் அவனுக்கு கிடையாது என்று சொல்லும் பொருள் ஒன்றுகூட கிடையாது. "யோ தேவானாம் ப்ரதமம் புரஸ்தாத் விச்வாதியோருத்ர;" என்ற மஹாவாக்யப்படி விச்வாதிகன் பரமேச்வரன் தான், அவர்

தான் எல்லோரையும் விட பெரியவர், முதன்மையானவர். ஒரு விசேஷ அறிவை பெற ஒருயுக்தி கூறுகிறுர். அசேதன மானவஸ்துவை விட சேதனன் உயர்ந்தவன்' சேதனர்களிடமும் மனுஷ்யன் உயர்ந்தவன், மனுஷ்யர்களில் குலச்ரேஷ்டர்கள் உயர்ந்தவர்கள், இப்படியே மனுஷ்யகந்தர்வர், தேவகந்தர்வர், கர்மதேவர், தேவர், இந்திரன், பிருஹஸ்பதி இவர்கள் ஒருவரை விட ஒருவர் உயர்ந்தவர் பிரும்மா, விஷ்ணு, ஹரன் இவர்களிலும் ஒருவரைவிட ஒருவர் உயர்ந்தவர், எல்லோருக்கும் மேலே,

ततोधिकतरस्साक्षात् शिवस्सांबस्सनातनः ।
सर्वकारणमीशानः सांबः सत्यादिलक्षणः ॥

எல்லோருக்கும் மேலானவர் இறப்பு பிறப்பு இல்லாத என்றும் சாச்வதமான வஸ்துவாக இருப்பவர், ஸர்வ காரணம், ஈசன், ஸாம்பபரமேச்வரன் ஆவர். ஸத்ய, ஞான, அனந்த, பிரும்மமாக இருப்பவர் இந்த பரமேச்வரன் தான் ஸாக்ஷாத் பரதத்வம் என்று அறிய வேணும். அதற்கு வேதம் ஸ்மிருதி ச்ரௌதம் அறிந்து,

अनेकजन्म संसिद्धानां श्रौतस्स्मार्तानुवर्तिनां ।
परतत्वतयाभाति शिवस्सांबः सनातनः ॥

பரதத்வம் என்று அறிந்து கொள்ள பல ஜன்மம் வேதம் சொன்ன ச்ரௌத கர்மாக்களைச் செய்து ஸ்மிருதிகளின்படி நடந்தவர் தாம் சிவம் ஸாம்பமூர்த்தி என்று சொல்லும் பரதத்வம் தான் என்று முடிவு செய்து அதன்படி நடந்து இகபர க்ஷேமம் அடைவர்.

(குறிப்பு:— இதன் முதல் கட்டுரை 1980-ஆண்டு மலரில் வெளியிடப்பட்டது.)

சிவம் ★

# Pathway to Self-Realisation

*By*

**Asthikamani A. Subrahmanya Iyer,** M.A., B.L.
Supreme Court Advocate, Madras-1.

To attain self-realisation, we should try to learn the teachings of great saints. Adi Sankara in "UPADESA PANCHAKA" gives, in a nutshell, the teachings of *Dharma Sastras.* There are forty instructions in five verses.

The first verse emphasises the absolute necessity of following the VEDAS without expecting any kind of reward but reciting as an offering to the ALMIGHTY. The second verse tells us the greatness of saints and the necessity of our association with such great persons. The third lays emphasis on the necessity of practising the knowledge which an aspirant gets from his GURU. The fourth verse tells us how realised souls will live in this world. The fifth verse gives us the quintessence of the final experience of the oneness of JEEVATMAN and PARAMATMAN.

The "UPADESA PANCHAKA" is an effective stotra that leads an aspirant to the right path to gain real spiritual knowledge and attain self-realisation. As Rome was not built in a day, self-realisation cannot also be had in a day. It can be attained only slowly and gradually and with the guidance of blessed souls and with the blessings of the LORD ALMIGHTY.

It is the knowledge of self and its equation to God that an aspirant should strive to reach. How can it be attained? It can be attained only if VEDA is accepted as an authority. The study of VEDAS and the practice of one's DHARMA alone will lead us to self-realisation and eternal Bliss.

In the innermost sheath, luminous, dwells BRAHMAN—Untainted, indivisible and pure. He is the light of all that shines. That is what the knowers of SELF realise. Thus says the MUNDAKA UPANISHAD.

OM SHANTHI – SHANTHI – SHANTHI

உ

சிவமயம்

# அருள் வழங்கும் ஆலயம்

# திருப்பனங்காடு

மஹேந்திரவாடி உமாசங்கரன்

காஞ்சிபுரத்துக்குத் தென்மேற்கில் ஆறுகாட்டுக்குச் செல்லும் வழியில் ஒன்பது கல் தொலைவில் உள்ளது திருப்பனங்காடு என்ற அழகிய சிவஸ்தலம். தொண்டை நன் நாட்டிலுள்ள முப்பத்திரண்டு பாடல் பெற்ற சிவஸ்தலங்களில் இதுவும் ஒன்ருகும். வன்பார்த்தான் பனங்காட்டூர் என்றும் திருப்பனங்காட்டூர் என்றும் அழைக்கப்படுகிறது.

''விடையின் மேல் வருவானை, வேதத்தின் பொருளானை'' என்று ஆரம்பித்து அருமையான பத்துத் திருப்பாடல்களால் சுந்தரமூர்த்தி சுவாமிகள் இத்தலத்து இறைவனைப் பாடி உள்ளார். அப்பர் பெருமான் தமது க்ஷேத்திரக் கோவைத் திருத்தாண்டகத்தில் ''பனங்காட்டூர் தண்காழி கடல்நாகைக் காரோணத்துங் கயிலாய நாதனையே காணலாமே'' என்றும், அடைவு திருத்தாண்டகத்தில் ''பலர் பாடும் பழையனூர் ஆலங்காடு பனங்காடு பாவையர்கள் பாவம் நீங்க விளையாடும் வளைதிளைக்கக் குடையும் பொய்கை வெண்காடும் அடைய வினை வேருமன்றே'' என்றும் பாடியுள்ளார்கள். பட்டினத்தடிகளும், இராமலிங்க சுவாமிகளும் இத்தலத்தைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்கள்.

சோழநாட்டிலுள்ள திருப்பனந்தாள், திருப்பனையூர் ஆகிய தலங்களும், தொண்டை நாட்டிலுள்ள திருப்பனங்காடு, திருவோத்தூர் என்னும் தலங்களும், நடுநாட்டில் உள்ள திருப்புறவார்பனங்காட்டூர் என்னும் தலமும்

சேர்த்துப் பனைமரத்தைத் தலமரமாகக் கொண்ட சிவ ஸ்தலங்கள் ஐந்து ஆகும்.

சுந்தரர் காஞ்சியிலிருந்து இத்தலத்துக்கு வருகையில் மிகுந்த களைப்போடும், பசியோடும் வருவதைக் கண்ட இறைவர், ஒரு வயோதிக அந்தணர் உருவில், அவர் முன் தோன்றி, தயிர் சாதம் அடங்கிய கட்டமுது மூட்டை ஒன்றைக் கொடுத்து, உண்டு பசியினைப் போக்கிக் கொள்க என்று கூறியதாகவும், குடிக்கத் தண்ணீர் இல்லாமல் உணவை எப்படி உண்பது என்று சுந்தரர் வினவியபொழுது முதியவர் சிரித்து "நான் பனங்காட்டூருக்கும் வன்பாக்கத் துக்குமாய் இருப்பவன். நான் இருக்குமிடத்தில் தண்ணீர் இல்லாமல் இருக்குமா? என்று கூறித் தமது பாதத்தால் மண்ணைச் சிறிது அகற்றவும் அங்கே கங்கை தோன்றக் கண்டு சுந்தரர் பரவசமடைந்த வேளையில் இறைவர் மறைந் தார் என்றும், அந்த இடம் சுந்தரர் தீர்த்தம் என்றும் ஊற்றங்குழி என்றும் அழைக்கப் பெறுகிறது என்றும் கூறப் படுகிறது. [ஆனால் சுந்தரர் பெருமானையே காப்பியத் தலைவராகக் கொண்டு 'உலகெலாம்' என்று தில்லைக் கூத்தப் பெருமான் அடியெடுத்துக் கொடுத்தருளிச் சேக்கிழார் பெருமான் அருளிச் செய்த பெரிய புராணம் என்ற திருத் தொண்டர் புராணத்தில் இச்செய்திக்கு ஆதாரம் இல்லை.]

அகஸ்திய மஹறிஷி தென்திசை வந்தபொழுது பனங் காட்டில் ஆசிரமம் அமைத்து ஆத்மார்த்த பூஜை செய்து வந்த பனங்காட்டுத் தம்பிரான் என்பவருக்கு, அங்கு மறைந்து கிடந்த பர்வதலிங்கத்தை எடுத்துக் காட்டி அதை முறைப்படி பிரதிஷ்டை செய்து சிவபூஜாவிதியை அவருக்கு உபதேசித்தார்.

பிற்காலத்தில் புலஸ்தியர் என்ற முனிவரும் தாம் இமயத்திலிருந்து கொண்டுவந்த கிரியாலிங்கத்தை இங்கு பிரதிஷ்டை செய்தார். ஆக இரண்டு முனிவர்கள் வழிபட்ட இரண்டு சந்நிதிகள் இங்கே உள்ளன. அகஸ்தியர் வழிபட்ட

மூர்த்தி ஸ்ரீ அமிர்தவல்லி அம்பாள் ஸமேத ஸ்ரீ தாலபுரீச்வரர் என்றும் அமுதவல்லி ஸமேத பனங்காட்டீசர் என்றும் அழைக்கப்படுகிறார்.

புலஸ்தியர் வழிபட்ட மூர்த்தியின் திருநாமம் ஸ்ரீகிருபா நாயகி ஸமேத ஸ்ரீகிருபாநாதேச்வரர் என்பதாகும். அகஸ்தியர் பூஜித்த காலத்தில் தலத்தின் எதிரில் பழமையான வேப்பமரத்தினை இருப்பிடமாகக் கொண்ட கோட்டை முனீச்வரர் தலமரமான பனைமரத்தில் உள்ள கனிகளை உதிரச் செய்யவும், அகஸ்தியர் மற்ற கனி வர்க்கத்தோடு பனம்பழத்தையும் தினசரி நைவேத்தியத்துக்கு இறைவனுக்குச் சேர்த்துக் கொண்டார் இம்முனீச்வரர் சிலை வடிவில் தலமரத்தினடியில் காட்சியளிக்கிறார்.

மற்றும் விநாயகர் ஸ்ரீகாசி விசுவநாதர் கஜலக்ஷ்மிஆகிய மூர்த்திகளையும் தல விருட்சங்களாக ஆண்—பெண் பனைமரங்களையும் கண்டு களிக்கலாம். கோவிலின் உள்ளே சிலை வடிவிலும் பனைமரங்களைத் தரிசிக்கலாம்.

அகஸ்தியர் பூசித்த காலத்தில், பனங்காட்டுத் தம்பிரான் விருப்பத்திற்கிணங்க, இறைவன் திருமுடியிலிருந்து கங்கை வெளிப்பட்டு எதிரில் ஈசானதிக்கில் இருந்த பள்ளத்தாக்கில் தங்கக்கண்ட அகஸ்தியர், அந்தத் தீர்த்தத்துக்கு ஜடா கங்கை என்று பெயரிட்டு கங்காதேவியையும் அதன் தென் கரையில் பிரதிஷ்டை செய்திருக்கிறார்.

சோழ மன்னர்களால் கட்டப்பட்ட இத்திருக்கோயிலை நாட்டுக்கோட்டை நகரத்தார் சீரிய முறையில் திருப்பணி செய்து 1923-ம் ஆண்டில் குடமுழுக்கு செய்வித்திருக்கிறார்கள். திருக்குளம் அழகாக உள்ளது.

இக்கோயிலுக்கு 22 கல்வெட்டுக்கள் உள்ளன. விஜய நகர மன்னர்கள் கோயிலுக்கு நிறைய தானங்கள் செய்திருப்பதாகத் தெரிகிறது. இத்தலத்தில் உயிருடன் உள்ள பனைமரங்களை வெட்டுகின்றவர்கள் தண்டனைக்கும் தோஷங்

களுக்கும் உள்ளாவார்கள் என்று கல்வெட்டில் காணப்படு கிறது.

"செல்வமல்கும் திருப்பனங்காட்டூரில் செம்பொற் செழுஞ்சுடரை" என்று தெய்வப் புலவர் சேக்கிழார் பெருமானும், "பனங்காட்டூர் மேவும் பனங்காட்டூர் நாதா வணங்காட்டும் அமுதவல்லி மன்னு" என்று உமாபதி சிவமும், "பூந்தவிசின் ஆர்த்தான் பனகத்தவனிந்திரன் புகழ் வன்பார்த்தான் பனங்காட்டூர் பாக்கியமே" என்று இராம லிங்க அடிகளும் பாடிப் பரவிய இப்பனங்காட்டூரை நாம் சென்று காண வேண்டாமா?

விடுமுறை நாட்களில் இத்தகைய கோயிலுக்குச் செல் வதை ஒரு கடமையாகக் கொண்டு ஆண்டவனை வழிபட்டு வந்தால் மனவமைதியும் மகிழ்ச்சியும் ஏற்படுவதுடன், நற்கதி பெற வழியும் ஏற்படுமல்லவா? சிவம்

சிவமயம்



# திருப்பனங்காட்டுத் திருப்பதிகம்

## சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளியது

பண்:சீகாமரம்] [7-ம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

விடையின்மேல் வருவானை வேதத்தின் பொருளானை
அடையில்அன் புடையானை யாவர்க்கும் அறிவொண்ணு
மடையில்வா ளைகள்பாயும் வன்பார்த்தான் பனங்காட்டூர்ச்
சடையிற்கங்கை தரித்தானைச் சாராதார் சார்வென்னே. 1

அறையும்பைங் கழலார்ப்ப அரவாட அனலேந்தி
பிறையுங்கங் கையுஞ்சூடிப் பெயர்ந்தாடும் பெருமானுர்
பறையுஞ்சங் கொலியோவாப் படிறன்றன் பனங்காட்டூர்
உறையுமெங் கள்பிரானை உணராதார் உணர்வென்னெ. 2

தண்ணார்மா மதிசூடித் தழல்போலுந் திருமேனிக்
கெண்ணார்நாண் மலர்கொண்டங் கிசைத்தேத்து மடியார்கள்
பண்ணார்பா டலருத படிறன்றன் பனங்காட்டூர்
பெண்ணாணு யபிரானைப் பேசாதார் பேச்சென்னே. 3

நெற்றிக்கண் ணுடையானை நீறேறுந் திருமேனிக்
குற்றமில் குணத்தானைக் கோணாதார் மனத்தானைப்
பற்றிப்பாம் பரையார்த்த படிறன்றன் பனங்காட்டூர்ப்
பெற்றொன்றே றும்பிரானைப் பேசாதார் பேச்சென்னே. 4

உரமென்னும் பொருளானை உருகிலுள் ளுறைவானைச்
சிரமென்னுங் கலனானைச் செங்கண்மால் விடையானை
வரமுன்னம் அருள்செய்வான் வன்பார்த்தான் பனங்காட்டூர்ப்
பரமன்எங் கள்பிரானைப் பரவாதார் பரவென்னே. 5

எயிலார்பொக் கம்மெரித்த எண்டோள்முக் கண்ணிறைவன்
வெயிலாய்க்காற் றெனவீசி மின்னாய்த்தீ யெனநின்றான்
மயிலார்சோ லைகள்சூழ்ந்த வன்பார்த்தான் பனங்காட்டூர்ப்
பயில்வானுக் கடிமைக்கட் பயிலாதார் பயில்வென்னே. 6

மெய்யன்வெண் பொடிபூசும் விகிர்தன்வே தமுதல்வன்
கையின்மான் மழுவேந்திக் காலன்கா லம்மறுத்தான்
பைகொள்பாம் பரையார்த்த படிறன்றன் பனங்காட்டூர்
ஐயன்எங் கள்பிரானை அறியாதார் அறிவென்னே. 7

வஞ்சமற்ற மனத்தாரை மறவாத பிறப்பிலியைப்
பஞ்சிச்சீ றடியாளைப் பாகம்வைத் துகந்தானை
மஞ்சுற்ற மணிமாட வன்பார்த்தான் பனங்காட்டூர்
நெஞ்சத்தெங் கள்பிரானை நினையாதார் நினைவென்னே. 8

மழையானுந் திகழ்கின்ற மலரோனென் றிருவர்தாம்
உழையாநின் றவருள்க உயர்வானத் துயர்வானைப்
பழையானைப் பனங்காட்டூர் பதியாகத் திகழ்கின்ற
குழைகாதற் கடிமைக்கட் குழையாதார் குழைவென்னே. 9

பாரூரும் பனங்காட்டூர்ப் பவளத்தின் படியானைச்
சீரூருந் திருவாரூர்ச் சிவன்பேர்சென் னியில்வைத்த
ஆரூரன் னடித்தொண்டன் அடியன்சொல் அடிநாய்சொல்
ஊரூரன் உரைசெய்வார் உயர்வானத் துயர்வாரே. 10

திருச்சிற்றம்பலம்

# Srilasri Gayathri Swamigal

*By*

**KOUNDINYA**

Sri Gayathri Swamigal is the son of Late Anan'ha Krishnayyar who was the indicated disciple of Swami Brahmananda, the illustrious disciple of Swami Ramakrishna Paramahamsa of Ramakrishna Mutt.

Swamigal says that the achievements of great saints are the result of their mental strength and indomitable will and not from external aids. He feels that as a result of the mania for external pleasures we are aping the west and slowly neglecting our ancient scriptures.

Swamigal regrets that we are neither following our ancient traditions nor have we adopted the good discipline of the west.

It is his opinion that every one is endowed with divine powers and the same has to be developed gradually to the paths chalked out in our scriptures. Unless we learn the scriptures and follow them, we will not be able to preserve our glory. Our forefathers have handed down to us a great treasure and the said treasure is given to us not to be kept in cold storage but should be spread for the welfare of humanity in general and for the people of Bharath in particular.

It is said in Bhagawath Gita that by repeating the single letter OM, any one who leaves the mortal coil becomes one with the Para Brahman. Sincerely one who chants the Gayathri Manthra will be endowed with all spiritual powers and he advises everyone to strive for it. "Omityakaksharam Brahma" etc.

It was sheer accident the Swamigal met his Guru. He was taken to his Guru by a young boy of twelve. But for the kindness of the said Guru, Swamiji could not have achieved his powers. Hence he says that only with His blessings an aspirant can attain self-realisation.

Swamiji had no schooling and he was shown the spiritual path by his beloved father. Swamiji gives advice to all who seek his advice and consoles those in distress.

His selfless dedication and serene compassionate words impress anyone who approaches him.

He prescribes the three 'Dhas', Dharma Daya and Dhama, (righteousness, compassion and self-control). With a view to develop these three qualities, one should be guided by a Guru.

"I perform miracles at times by the grace of God just to enable non-believers gain faith in the Almighty. My mission in life is to render all possible help to the needy mankind surmounting various unnatural social barriers such as caste, creed, untouchability and so on. It is also my goal to establish educational institutions for the uplift of the illiterate and hospitals for the suffering", says the Swamiji.

Sri-La-Sri Gayathri Swamigal spearheads a glorious movement offering the blessings and protection of Goddess Gayathri to all those who resort to him. Innumerable instances of the miracles performed by him with the blessings of Gayathri for all sufferers all over the country reveal not only his powers of Siddhi but his essentially compassionate heart that flows out to all sufferers and hastens to cure them or help them.

He is simple and simplicity is natural. He is detached and his detachment is spontaneous. He displays none of the external characteristics of a God-man like growing a beard or wearing saffron clothes.

Sri-La-Sri Gayathri Swamigal reverentially alludes to the teachings of his father. He was the fourth son. Somehow because of misfortunes in life his father was not able either to give him good education or leave behind wealth. Instead, on his death-bed his father gave him a book in Malayalam entitled DHARMA – ARTHA – KAMA-MOKSHA in place of wealth and left him with the Gayathri-mantra to be meditated on by him in place of education. Ever since he has been in all faith and devotion meditating on the Gayathri mantra.

May Goddess Gayathri continue to shower Her blessings on Shri Gayathri Swamigal for his long life and continued service to humanity.

Om Shanthi, Shanthi, Shanthi.



உ



# ஸ்ரீ
# சங்கரோபதேச ரத்னமாலா

## 1. எல்லாவற்றையும் விளக்கும் ஜோதி

வினு :— எந்த ஜோதியால் நீ உலகைக் காண்கின்ருய்?

விடை :— பகலில் சூரியன், இரவில் தீபம் முதலியவற்ருல் காண்கின்றேன்.

வினு :— சூரியன் முதலியவைகளை விளக்கும் ஜ்யோதிஸ் எது?

விடை :— கண்.

வினு :— கண் மூடியிருந்தால்?

விடை :— புத்தியைக் கொண்டு காண்கின்றேன்.

வினு :— அதைக் காண்பது எது?

விடை :— நான் என்பது?

முடிவுரை:— ஆதலால் நான் எனக்கூறும் நீதான் ஜ்யோதிஸ். அதே ஆத்மா. அது தான் எல்லாவற்றையும் விளக்கும் ஜ்யோதிஸ்.

(இந்த வினுவிடை ஒரே சுலோகத்தில் அமைந்தது)

## 2. உபதேச பஞ்சகம்

1. வேதத்தை எப்போதும் ஓது. அநுகூறிய கர்மாவை நன்கு அனுஷ்டானம் செய், அக்கர்மாவே ஈசனுக்குச் செய்யும் பூஜை. காம்ய விஷயத்தில் ஆசையை அகற்று. குவிந்த பாவத்தைக் கர்மானுஷ்டானத்தால் கரை. இல்லறத்தில் உள்ள துக்கத்தை யோசிப்பாய், பரமாத் விடம் ஆசை வை. ஸம்ஸாரத் தொல்லையிலிருந்து சிக்கிர மாகக் கிளம்பு.

2. சாதுக்களுடன் சேர். பகவானிடத்தில் ஆழ்ந்த அன்பைச் செலுத்து. பொறுமையை அப்பியாஸம் செய். பயனற்ற கர்மாவை விடு. நல்ல வித்வானைத் தேடிச் செல். பிரதி தினம் அவன் பாதுகையைச் சேவி. பிரம்மத்தைக் கூறும் பிரணவம் என்னும் ஓர் அக்ஷரத்தை வேண்டு. வேதாந்த வாக்யத்தைக் கேள்.

3. அவ்வாக்கியத்தின் அர்த்தத்தை விசாரி. வேதாந் தத்தின் கருத்தைக் கைக்கொள். வீண்வாதம் செய்யாதே. வேதங்கூறிய தத்துவத்தில் உன்னுடைய யுக்தியைச் சேர்த்து யோசி. நான் பிரம்மம் என தினந்தோறும் அனு சந்தானம் செய். கர்வத்தை விடு. உடலில் நான் என்னும் எண்ணத்தை அகற்று. பண்டிதர்களோடு வீண் வாதம் செய்யாதே.

4. பசியைப் பிணியாக எண்ணிப் பரிஹாரம் செய். ருசி பார்த்து நாக்கை வளர்க்காதே. பிக்ஷையையே அதற்கு மருந்தாகக் கொள். ருசியான பதார்த்தத்தை யாசிக்காதே. தெய்வச் செயலாகக் கிட்டியதைக் கொண்டு ஸந்தோஷப்படு. சீதோஷ்ணாதி சுகதுக்கங்களைப் பொறுத்துக் கொள் வீணாகப் பேசாதே உதாசீனனாயிரு. எதிலும் தலையிடாதே. ஒருவரிடத்தில் தயை, ஒருவரிடத்தில் நிஷ்டூரம் என்பது வேண்டாம்.

5. ஏகாந்தத்தில் சுகமாக வீற்றிரு. பரமனிடத்தில் மனதைச் செலுத்து. எங்கும் நிறைந்ததாக ஆத்மாவைப் பார். ஜகத்தெல்லாம் அவ்வான்மாவை அறிந்த பிறகு மறைந்து போகும். ஞானத்தால் ஸஞ்சிதம், ஆகாமி என்னும் கர்மாக்களை ஒழிப்பாய். பிராரப்தத்தை அனுபவித்துக் கழிப்பாய். பரப்ரம்மமாக இரு. (பல ஜன்மங்களிலும் சேர்த்து வைத்த பாபம் ஸஞ்சிதம், தற்சமயம் அனுபவிப்பது பிராரப்தம். இனிமேல் வரப் போவது ஆகாமியம்).

## 3. மாயா பஞ்சகம்

1. ஒப்பற்ற நித்ய அகண்ட சின்மயமான ஆன்மாவாக நாமிருக்க ஜீவன்—ஈசன்—உலகம் எனப் பின்னப்படுத்தியது மாயையன்றோ? சூரியனைப் போல் பிரகாசிக்கும் ஆன்மாவை மறைக்கும் ஸாஹஸமான காரியத்தைச் செய்யும் சக்தி இந்த மாயைக்கு உண்டு.

2. ஆயிரம் வேதாந்தச் சொற்களை அலசிப் பார்த்த வரையும், தனத்தைக் கண்ணால் கண்டவுடன், அவ்வேதாந்தத்தை மறந்து பசுக்களைப் போல் விவேகமற்றவராகச் செய்வது மாயை.

3. ஸுகவடிவனாய், அகண்ட போதமாய் அத்விதீயமாயுள்ள ஆத்மாவை ஆகாசம்—வாயு முதலியவைகளைக் கொண்டு கல்பிதமான ஸம்ஸார ஸாகரத்தில் மூழ்க வைத்து ஆட்டி வைப்பது இம்மாயையேயன்றோ?

4. வர்ணம், குணம், ஜாதி முதலியவை ஆத்மாவுக்கு இல்லை. ஸுகமயமான வஸ்து அது. அவனிடத்தில் நான் பிராம்மணன், நான் க்ஷத்திரியன் என அகங்காரத்தை உண்டுபண்ணி, புத்ரன்—களத்திரம்—வீடு முதலியவைகளிடத்தில் மோஹத்தையும் கற்பித்த சாமர்த்தியம் வாய்ந்தது இந்த மாயை.

5. அகண்டமான ஆத்மாவிடம் ஹரி-ஹரன்-பிரம்மா என பேதத்தைக் கற்பித்து நான் வைணவன், நான் சைவன் எனப் பண்டிதர்களேயும் ஆட்டி வைப்பது இம்மாயை,

## 4. யதி பஞ்சகம்

1. வேதாந்த வாக்கியங்களில் எப்போதும் ரமிப்பார். பிக்ஷான்னத்திலுலே ஸந்தோஷமடைவார். சோக மோஹத்தைக் கவனிக்க மாட்டார். புத்தி வியாபாரம் ஒன்றை மட்டும் பிரம்மத்தினிடம் செலுத்துவார். இவரே பாக்கியவானுன ஸந்நியாஸி.

2. மரத்தடியில் படுத்துக் கையில் பிக்ஷையேந்தி ஐச்வர்யத்தைக் குப்பையாகக் கருதும் ஸந்நியாஸி பாக்கியவான்.

3. உடலே மறந்து, தன்னேத்தானே கண்டு, வேறு ஒன்றையும் உள்ளும் புறமும் நினையாதவன் பாக்கியசாலி.

4. ஆத்மானந்தத்தில் களித்து இந்திரிய வியாபாரங் கள் அனேத்தையுமடக்கி இரவும் பகலும் பிரம்மத்தில் ரமிப்பவனன்றே பாக்யசாலி?

5. பவித்ரமான பஞ்சாக்ஷரியை ஜபித்துப் பசுபதி யான பரமேச்வரனே மனதிலே இருத்தி பிக்ஷையெடுத்து திக்கு திக்காகத் திரியும் ஸந்நியாஸி பாக்யவானுவான்.

## 5. அத்வைத பஞ்சரத்னம்

1. நான் என்பது தேஹமல்ல. இந்திரியங்கள் அல்ல. அஹங்காரமல்ல பஞ்ச பிராணமுமல்ல. புத்திர, களத்திர க்ஷேத்திராதிகளுக்குத் தூரத்தில் உள்ள ஸாக்ஷியாய் ப்ரத்யகாத்மாவாயுள்ள சிவனென்பதே நான்.

2. பழுதை என்ற அறிவில்லாததால் பாம்பு என்ற எண்ணம் தோன்றுகிறது. அதே போல் ஆத்மா என்று

உணராததால் அதை ஜீவன் என்று எண்ணுகின்றாய். ஆப்தனது மொழியால் பாம்பு என்னும் அஞ்ஞானம் ஒழிவது போல குருவினது உபதேசத்தால் ஜீவனல்ல சிவன் என உணர்வாயாக.

3. ஸத்ய ஞானானந்த ரூபமான ஆத்மாவினிடத்தில் மோஹத்தினால் தூக்கத்தில் கனவு தோன்றுவது போல அசத்யமான எல்லா உலகும் தோன்றுகிறது. ஆனால் சுத்த பூரண நித்ய ஏக வஸ்துவாய் இருப்பது சிவனே.

4. பிறத்தல், வளர்தல், இறத்தல் முதலியவைகள் தேஹதர்மமாகும். செய்கிறேன், புசிக்கிறேன் என்பது எல்லாம் சுத்தாத்மாவிடத்தில் தோன்றாது.

5. ஆத்மாவைத் தவிர வேறு சத்தியமான வஸ்து வேறொன்றுமில்லை. ஆனால் தோன்றுபவையெல்லாம் மாயையால் கற்பிக்கப்பட்டதே. பிரதிபிம்பம் கண்ணாடியில் தெரிவது போல ஆத்மாவின் நிழலே இது.

## 6 மனீஷா பஞ்சகம்

(காசியில் ஸ்ரீவிச்வநாதர் புலையன் வடிவமாக வந்து அனுபவ வேதாந்தியா என ஸ்ரீசங்கர பகவத்பாதரைச் சோதித்தபொழுது பாடியருளியது)

1. விழித்திருக்கும் நிலை, கனவு, ஆழ்ந்த உறக்கம் என்ற காலங்களில் எந்த அறிவு நான் என விழித்திருக்கின்றதோ, எது பிரம்மா முதல் எறும்புவரை எல்லோரிடத்தும் நான் என ஜகத்ஸாக்ஷியாகப் பரந்து நிற்கிறதோ அதுதான் நான் என்பது. காணும் வஸ்துக்கள் அல்ல என எவனுக்கு நிச்சயமான புத்தி இருக்கின்றதோ அவன் சண்டாளனாயினும், பிராம்மணனாயினும் அவனே என் குரு ஆவான்.

2. இந்த ஜகத்தெல்லாம் பிர்ம்மமே. ஸத்வம்-ரஜஸ்-தமஸ் என்ற முக்குணமுள்ள மாயையால் இந்த நாமரூபம்

நித்ய நிர்மலமான ஆத்மாவிடத்தில் கல்பிதம். இப்படிப் பட்ட அறிவுள்ள எவனும் என் குருவே.

3. காணப்படும் வஸ்துக்கள் எல்லாம் நிச்சயமாக அழிவுள்ளவை. அழிவற்ற பொருள் பிரம்மம் ஒன்றே என ஆசாரியனுபதேசத்தைக்கொண்டு சுத்தமனதால் விமர்சை செய்து ஞானச்சுடரால் ஸஞ்சிதம், ஆகாமி என்னும் கர்மத்தை எரித்துப் பிராரப்தத்திற்காக இவ்வுடல் என்ற எண்ணமுடையவரே குரு.

4. பசு, பக்ஷி, மனிதர், தேவர் முதலியவர்களால் எது நான் என கிரஹிக்கப்படுகின்றதோ, எதன் ஒளியால் அசேதனமான மனம்—இந்திரியம்—உடல் முதலியன பிரகாசிக்கின்றதோ, மேகத்தால் சூரியமண்டலம் போல அசேதன வஸ்துக்களால் மறைக்கப்பட்டுக் கிடக்கும் அந்த ஜ்யோதிஸ்ஸை தியானம் செய்யும் யோகியே குரு.

5. எந்த ஆனந்தக்கடலின் திவலையின் திவலையால் இந்திரன் முதலியோர் சுகம் பெறுகின்றனரோ, எதை சாந்தமான மனதில் வைத்து முனிவர்கள் சுகம் பெறுகின்றனரோ, எதனிடத்தில் லயமானவர் தன்மயமாகின்றனரோ, அப்படிப்பட்ட அறிவு உடையவனே இந்திரனும் காலில் விழுந்து பணிவான்.

### 7. நிர்வாண ஷட்கம்

1. நான் என்பது மனஸ்-சித்தம்-புத்தி-அஹங்காரம் இவைகள் அல்ல. காது, நாக்கு, மூக்குமல்ல. பிருதிவி, தேஜஸ், வாயு, ஆகாசமுமல்ல. சித்தாய், ஆனந்தமாய், சிவமாய் இருப்பவன் நான்.

2. பிராணன், பஞ்சவாயு, ஸப்ததாதுக்கள் (ரஸ-ரத்த-மாம்ஸ-மேதஸ்-மஜ்ஜா - அஸ்தி-ரேதஸ்), அன்ன-ப்ராண-மனோ-விக்ஞான-ஆனந்த மென்னும் ஐந்து கோசங்களும், வாக்-பாணி-பாதம்-பாயு-உபஸ்தமுமல்ல நான்.

3. ராகத்வேஷம், லோபமோஹம், மதமாத்ஸர்யம், தர்மார்த்த காம மோக்ஷம் இவைகளுமல்ல நான்.

4. பாபபுண்யம், சுகதுக்கம், மந்த்ரதீர்த்தம், வேத யக்ஞம், உணவு-உண்ணத்தக்கது-உண்பவன் இவைகளுக்கு அதீதமாக ஆனந்தமாயுள்ளது ஆத்மா.

5. யமன், பயம், ஜாதி, தந்தை, தாய், பிறப்பு பந்து மித்ரன், குருசிஷ்யன் இப்பேதமற்று ஆனந்தமாயுள்ளது ஆத்மா.

6. நிர்விகல்பமாய், உருவற்றதாய், எங்கும் நிறைந்து எல்லாவற்றிலும் தங்கி பந்தமோக்ஷமற்றதாய், ஆனந்த ரூபமாய் விளங்குவது ஆத்மா.

## 8. தன்யாஷ்டகம்

1. அறிவென்பது யாது? புலன்களை அடக்குவதே. அறியத்தக்கது எது? உபநிஷத்துக்களில் நிச்சயிக்கப்பட்ட பரம்பொருளே. அப்பரம்பொருளில் அடங்காத அவாக் கொண்டோரே மேலானவர். மற்றவர் ஸம்ஸார ஸாகர சுழலில் சுழல்வோராவர்.

2. ராகத்வேஷ மதமோஹம் முதலிய சத்துருக்களை ஜெயி. ஆசையில்லாத ஸ்வதர்மம் என்னும் ராஜ்யத்தைப் பிடி. உனக்கு வேண்டியது சுகம் என்று உணர். ஆத்ம வித்யை என்னும் மனைவியை மணந்து வனமென்னும் வீட்டில் வசி. நீ தன்யனுவாய்.

3. கேவலம் ஸம்ஸாரத்தையே சுகமாக எண்ணி உழைப்பவன் நர ஜன்மத்திலும் தாழ்ந்த ஜன்மத்தைப் பெறுவான். ஆதலால் ஆத்மாவிடத்தில் ஆசை கொள். உபநிஷத்திலுள்ள ரஸத்தைப் பருகு. விஷய சுகத்தை வெறுத்துத் தள்ளு. பற்றுதலை விட்டு ஏகாந்தமாயிரு பேரானந்தம் பெறுவாய்.

4. நான் என்னுடையது என்பவை நம்மை பந்தப் படுத்தும் சங்கிலி. அதை அறுத்தெறி. மான அவமானங் களை சமமாக எண்ணு, நீ காணும் வஸ்துவினிடம் ப்ரம்மம் சமமாக இருப்பதாக நினை. நம்மை ஆட்டி வைப்பவன் வேறொருவன் என அறிந்து உன் கர்மாவிற்கு ஏற்றபடி அவன் அளிக்கும் பயனைப் பெற்று சுகமாக வாழ்வாயாக.

5. 'புத்ரன்—மனைவி—பொருள் இம்மூன்று ஆசைக்கும் ஈஷணத்ரயம் என்று பெயர். அதனைக் களைவாய். மோக்ஷ மார்க்கத்தைத் தேடு. ஆகாரத்திற்கென்ன செய்வதென்று கலங்காதே. கையேந்தி பிக்ஷை எடுப்பாய். பரமாத்மா என்னும் சுடரை உன்னுள்ளத்தே பார்ப்பாயாக.

6. ஆத்மா இல்லை என்று இல்லை. இருக்கிறது என்றும் இல்லை. இல்லாமலிருப்பது என்றுமில்லை. மஹத்துமல்ல. அணுவுமல்ல. பெண்ணும், ஆணும், நபும்ஸகமும் அல்ல என்று உணர்ந்து அகண்டமான பொருளை ஏகாக்ர சித்தனு யிருந்து உபாஸி. இல்லையேல் ஸம்ஸார பாசம் உன்னைக் கட்டி விடும்.

7. இந்த ஸம்ஸாரம் அக்ஞானமென்னும் சேற்றினுல் பூசப்பட்டது. ஸாரமில்லாதது. அலசிப் பார்த்தால் துன்பம் நிறைந்தது. பிறப்பு, இறப்பு, பிணி, ஜரை இவை களால் சூழப்பட்டது. இப்பாசத்தை அறிவு என்னும் கத்தி யினுல் அறுத்துத் தள்ளு.

8. அடக்கமுள்ளவர், ப்ரம்மத்தைத் தவிர மற்றதை எப்போதும் எண்ணுதவர், நல்ல ஸ்வபாவம் உள்ளவர், கடவுள் ஒன்றே என நிச்சயமுள்ளவர், மோஹமற்றவர், இவரே பெரியார். இவருடன் சேர்ந்து வனத்தில் வசித்துப் பரமாத்மாவின் பதத்தைத் தேடு.

## 9. ஸ்வரூபானுஸந்தானுஷ்டகம்

1. உபவாஸம்-ஸத்யம்-வேதமோதல் முதலிய தவத் தாலும் தேவர்களைக் குறித்துச் செய்யும் பூஜை-ஹோமம்

முதலிய யாகத்தாலும், தானத்தாலும் சித்தத்தைச் சுத்த மாக்கு. அரச பதவியும் துச்சமானது என்று எண்ணு. எல்லாவற்றையும் துறந்த பின் நித்யமாயுள்ள பொருள் ஒன்று உன்னுள்ளே விளங்கும். அதுவே நான் என உணர் வாயாக.

2. அடக்கமும், தயையுமுள்ள ப்ரம்மநிஷ்டரான குருவைத் தேடி பூஜை செய். அவர் கூறும் ப்ரம்மத்தை உன் புத்தியால் விசாரி. இடைவிடாது அதை உன் மனதில் நினை. நீயே ப்ரமம் என்று உணர்வாய்.

3. ஆனந்தமாய், பிரகாசமாய், அளவற்றதாய், பிரபஞ்சத்திற்கு மேலாகத் தோன்றும் ஆத்மாவே நான் என பலமுறை ஓயாது உணர்ந்தால் நீயே துரீய ப்ரம்மமாக நிற்பாய்.

4. அப்பரம்பொருளை உணராத குற்றத்தால் நீ உலகைக் காண்கிறாய். அதை உணர்ந்தால் உலகம் அதில் ஒளிந்துவிடும். மனதுக்கும், வாக்குக்கும் எட்டாது சுத்த மாய் பந்தமற்று நிற்பது பரம்பொருள்.

5. வேதாந்த வாக்யங்கள் இதில்லை இதில்லை என எல்லாவற்றையும் தள்ளியபோது ஸமாதியிலுள்ளோர் உள்ளத்தில் பூர்ணமான வஸ்து ஒன்று விளங்கும். அது மூன்றவஸ்தைகளுக்கும் மேலானது. அதே பரமாத்மா.

6. உலகில் நாமனுபவிக்கும் சுகமெல்லாம் பரமா நந்தத்தின் ஓர் திவலை. அதனொளியால் உலகம் விளங்கு கிறது. அப்பொருளைக் கண்டோமானால் மற்றதெல்லாம் அதனுள்ளே தோன்றும்.

7. பரம்பொருள் முடிவற்றது. எங்கும் பரவியது. விகல்பமற்றது. ஆசையற்றது. ஸங்கமில்லாதது. ஓங்கா ரத்தால் அறியத்தக்கது. உருவில்லாதது. மரணமற்றது.

8. அது ஆனந்தக்கடல். அதில் முழுகியவன் இவ்வுலகம் அனைத்தும் மாயா விலாஸமென்பான். அவ்வாத்ம நிமித்தமான ஆச்சரியத்தைக் காண்பான்.

9. ஆத்மஸ்வரூபத்தை அனுஸந்தானம் செய்யும் ஸ்துதிகளை ஆதரவுடன் அர்த்தமுணர்ந்து படிக்கவேண்டும். சொல்லக் கேட்கவேண்டும். சித்தம் தெளிந்தால் பக்தன் தன்மயமாக அதிககாலமாகாது.

## 10. நிர்வாண மஞ்சரி (12 சுலோகங்கள்)

1. தேவன், மனிதன், ராக்ஷஸன், கந்தர்வன், யக்ஷன், பிசாசம், புருஷன், ஸ்த்ரீ, நபும்ஸகம் என்பதெல்லாம் உடலை ஒட்டிய வ்யவகாரமே தவிர, ஆத்மாவைப்பற்றியது அல்ல. ஆத்மாவோ ஸ்வயம்ப்ரகாசனாய் இவைகளுக்கு மேலாக நிற்கும் சிவவடிவாகும்.

2, பாலன், யுவா, கிழவன், ப்ரம்மசாரி, க்ருஹஸ்தன், வானப்ரஸ்தன், ஸன்யாஸி என்பதெல்லாம் தேஹதர்மமே. ஆன்மா என்பது உலகம் தோன்றி ஒடுங்கும் ஸ்தானமாகும்.

3. ப்ரத்யக்ஷம், அனுமானம் முதலிய பிரமாணங்களால் ஆத்மாவை அறியமுடியாது. மாயா கல்பிதமான வஸ்துக்களையே அவைகள் காட்டும். இவனே மாயையைக் கடந்தவன். அவனைக்காண வேறு உபாயமும் கிடையாது. ஸ்தூலசூக்ஷ்மகாரணமெனும் மூன்று சரீரம் உள்ளவனாயினும் அத்விதியன். இந்த்ரியங்களுக்கெட்டாதவன். எல்லாமாயிருப்பவன்.

4. ஒரு விஷயத்தை நினைத்து அதையறிந்து அதைப் பிறரிடம் சொல்லி, அதைச்செய்து பயனை அனுபவித்து, இதெல்லாம் துச்சம் என வெறுத்து நிற்கிறோம், இதெல்லாம் ஆத்மாவின் வேலையல்ல. ஆனால் மனதில் தோன்றும்

எண்ணங்களை பிரகாசப் படுத்தும் சாக்ஷிரூபமாய் நிற்பது ஆத்மா.

5. உணவு முதலியவிஷயத்தில் முயற்சிப்பதும், இது நம்மைக்கட்டிவிடும் என அதிலிருந்து விலகி நிற்பதும் ஆத்ம காரியமல்ல. மனதில் ஆத்மஸ்வரூபத்தை அனுஸந்தானம் செய்யாதபோது உலகப்ரவ்ருத்தி உதிக்கும். எப்பொருளின் நிழல் சித்தத்தில் உதித்து வியவஹாரங்கள் தோன்றுகின்றனவோ அவனே ஆத்மா.

6. மாயைக்கும் எது காரணமோ, உலகைக்கொண்டு, எதை ஊகிக்கிறோமோ, எது எல்லா ப்ரகாசத்திற்கும் காரணமோ அப்பொருளே மெய்ப்பொருள்.

7. புத்தியே எல்லா வியாபாரங்களுக்கும் காரணமாயிருப்பதால் அதே ஆத்மா என்பர் சிலர். அதில்லை. அதைவிட ஆத்மா வேறு. இதனால் ஆத்மாவிற்கு யாதொரு காரியஸித்தியுமில்லை. அழிவுள்ள அங்கங்களை ஆத்மா எனலாமோ? இல்லை. ஆத்மாவிற்கு ஆண், பெண் என பேதமும் அங்கமுமில்லை. ஆனால் ஹ்ருதய புண்டரீக ஆகாசத்திலுள்ளது ஆத்மா. ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகமெனும் துக்கமில்லாதது.

8. உலகத்தைத் தனியாக உலகமெனப் பார்க்கும் போது உலகில் ஆத்மா மறைந்துவிடுகிறது. ஆத்மாவைக் கவனிக்கும்போது அதனுள் உலகம் மறைந்திருக்கும். மநஸ், புத்தி, சித்தம், அஹங்காரம் இவைகளைத் தூண்டிவிடுவது ஆத்மா.

9. உள்ளும், புறமும் நித்ய சுத்தமாய் ஒன்றாய் ஸத்சித் ஆனந்த மயமாய் ஸ்தூலசூக்ஷ்ம உலகைத் தோற்றிவைத்து தனக்குள்ளே லயப்படுத்துவது பரம்பொருள்.

10. ஒளியுள்ள சந்திர சூர்யாதிகளுக்கு ஒளியை அளித்து, தனக்குள்ளும் பேதமற்று எல்லா உலகையும்

தன் பாதத்தால் (கால் பங்கால்) வியாபித்து சக்தியை நமக்களிப்பது பிரம்மமே.

*11.* இவ்வான்மாவிடம் பயந்து யமன், சூரியன், வாயு முதலியவர்கள் தன் தன் வேலையைச் செய்கின்றனர். சித்தம், புத்தி, இந்திரியம் இவைகளுக்குச் சக்தியையளித்து ஹரி. ஹர, பிரம்மா என அழைக்கப்படுவதும் ஆத்மா.

*12.* ஆகாசம் போல் பற்றற்று எங்கும் நின்று சாந்த சுடர் வடிவமாய் உருவற்று, அடி முடியில்லா சங்கரனாய் நிற்கும் அப்பொருளை உள்ளத்திலே ஊன்றி உணர்ந்து சுகம் பெறுவாயாக.

[குறிப்பு: சுமார் 52 ஆண்டுகளுக்கு முன் (பிரஜோத்-பத்தி வருஷம்) காலஞ்சென்ற பிரம்மஸ்ரீ ஸ்ரீவத்ஸ சோம தேவ சர்மா அவர்களால் தொகுத்து வெளியிடப்பட்ட ஸ்ரீ சங்கரோபதேசரத்னம் என்ற நூல் பிரதி ஒன்று நமக்குத் தற்செயலாய்க் கிடைத்தது. அந்த நூல் தற்சமயம் கிடைப்பதரிது. ஆதிசங்கரரின் ஒவ்வொரு கிரந்த சுலோகங்களையும் சுருக்கமாகத் தமிழில் கொடுக்கப்பட்டுள்ளது. அந்த நூலினின்றும் சிலவற்றைத் தொகுத்து அதிக மாறுதல் இல்லாது இந்த மலரில் கொடுத்துள்ளோம். எஞ்சியுள்ள பகுதிகள் தொடர்ந்து வருஷந்தோறும் பிரசுரிக்கப்படும். அன்னாரது அரிய முயற்சி வீண் போகாது மீண்டும் ஆஸ்திகர்க்குப் பயன்படுவது குறித்து அவர்களது சந்ததியினரும், பந்துமித்திரர்களும் மகிழ்ச்சியடைவார்கள் என நம்புகின்றோம்.

—பதிப்பாசிரியர்]

ஓம் தத் ஸத்



# கோ ஸம்ரக்ஷணம்

சிவபுராண ஞான பூஜகர், சாஸ்த்ரப்ரசார பூஷணம்,
சிவபுராணச் சக்கரவர்த்தி, சிவபுராணக் காவலர்
ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா
(சங்கரன் அடிமை)

அம்மையப்பன் திருவருளால் கோஸம்ரக்ஷணம் அல்லது பசுக்களைப் பாதுகாத்தல் என்னும் பொருள் பற்றி எழுதும் வாய்ப்பினைப் பெற்று எழுதுகின்றேன். மனிதனுக்குப் பயன் படும் பிராணிகள் எவ்வளவோ உள்ளன. விலை உயர்ந்த பிராணிகளும் உள்ளன யானை இருந்தாலும் ஆயிரம் பொன், இறந்தாலும் ஆயிரம் பொன் என்று கூறுகிறோம். அதனையும் கூட கஜபூஜை என்று செய்கிறார்கள். ஆனாலும் அது கூட "மாதா" அல்லது தாய் என்று அழைக்கப்படு வதில்லை. ஒரு மனிதனுக்கு உலகத்தில் தாயை விடச் சிறந்த உறவில்லை. தெய்வமும் இல்லை. லலிதா ஸஹஸ்ர நாமத்தில் முதற் பெயராக ஸ்ரீ மாதா என்று அமைந்துள்ளது. அன்னை யும் பிதாவும் முன்னறி தெய்வம் என்ற அருள் வாக்கிலும் அன்னையே முதற்கண் வைக்கப்படுகிறாள். அத்தகைய மாதா என்ற பெருமை கோ அல்லது பசுவுக்கே அமைந்துள்ளது. கோமாதா என்று அருமையுடன் அழைக்கின்றோம்; பூஜிக் கின்றோம். இதிலிருந்து பசுக்களின் பெருமையையும் தெய்வத் தன்மையையும் நம் முன்னோர்கள் எவ்வளவு உணர்ந்து உள்ளனர் என்பது புலனாகின்றதன்றோ?

ஷண்மதஸ்தாபனாசாரியாரும், நமது குலகுருவும் ஜகத் குருவுமான ஆதிசங்கர பகவத் பாதர்கள் தாமருளிச் செய்த 'ப்ரச்நோத்தர ரத்ன மாலிகா' என்ற அரிய நூலில் அனைவருக் கும் தாய் யார்? என்ற வினாவிற்கு பசுவே என்று விடையளித் துள்ளார்கள். நமது காமகோடி பீடாதிபதி ஜகத்குரு

பரமாசாரிய ஸ்வாமிகள் 12-1-1933 சென்னை ஸ்ரீஏகாம்ரேசுவரர் கோயில் தெருவில் செய்த ஒரு உபன்யாசத்தில் இதற்கு விளக்கம் தெரிவிப்பது போன்று பின்வரும் கருத்துக்களை வெளியிட்டுள்ளார்கள்.

"கோவானது லோகத்திற்கே தாயாக இருக்கிறது. கோவைத் தவிர பாக்கிப் பிராணிகளெல்லாம் அவற்றின் சிசுக்களுக்கு மாத்திரம் பால் கொடுத்து ரக்ஷிக்கின்றன. அதுவும் கொஞ்ச காலத்திற்கு தான். பசுவோ எந்த ஜாதிக்கும் ஆயுள் உள்ள வரையில் பால் கொடுத்து ரக்ஷிக்கிறது. கன்று தன் தாயின் பாலைக் குடித்த பிறகு மற்ற ஜனங்களுக்கும் கொடுக்கும்படியாக அவ்வளவு க்ஷீரவிருத்தி பசுவுக்கு இருக்கிறது. மற்று எந்தப் பிராணிக்கும் இந்த குணம் கிடையாது." ஜகத்குருவின் இந்த அருள் வாக்கு **ஸர்வேஷாம் மாதா தேனு:** (அனைவருக்கும் தாய் பசுவே) என்ற பகவத் பாதர்களின் அருளிச்செயலை நன்கு விளக்குகின்றதன்றோ?

சிவாலயங்களில் அறுபத்துமூவர் என்ற ஒரு திருவிழா நடைபெறுகின்றது. கூட்டம் கூடுவதும் மக்கள் இடிபடுவதும் தமது உடைமைகளைப் பறிகொடுப்பதும் தான் இந்த விழாக்களில் காணப்படுகின்றதே தவிர அறுபத்து மூவருடைய பெருமைகளை அறிய யாரும் முயற்சிப்பதாகத் தெரியவில்லை. கோயிலினுள் இருக்கும் அறுபத்துமூவர் மூல மூர்த்திகளுக்கு எண்ணெய்க் காப்புக்கூட பல ஆலயங்களில் இல்லை. அங்ஙனமிருக்க அறுபத்து மூவர் வரலாற்றைப் பற்றி அறிய ஆர்வம் இல்லை என்று குறைப்பட்டுப் பயன் என்ன? நிற்க, இந்த அறுபத்து மூவரில் ஒருவர் சண்டேச நாயனார். அவர் விசாரசருமர் என்ற பெயரில் அவதரித்தவர். உபநயனம் ஆகி, வேதம் பயிலும் காலம். ஒரு நாள் வேதம் பயின்றுவிட்டு விசாரசருமர் தெரு வழியே சென்று கொண்டிருக்கையில் ஊர் மக்களுடைய பசுக்களை மேய்ப்பதற்காக இடையன் ஒருவன் ஓட்டிச் சென்ற பசு மந்தையில் கன்றை ஈன்ற பசு ஒன்று செல்லும்போது தன்னை

மேய்க்கும் இடையனைக் கொம்பினால் முட்டப் போயிற்று. அந்த இடையன் சிறிதும் கூசாமல் தன்கைக்கோலினால் அந்தப் பசுவை நையப்புடைத்தான். அதனைக்கண்ட விசாரசருமர் அப்பசுவின்மேல் இரக்கங்கொண்டு அதனை அடிபடுவதினின்றும் தடுத்தார். இடையனைக் கோபித்தார். பிறகு இடையனுக்கு அருள் செய்பவராய் (உலகத்தார் அனைவரும் அறிந்து உய்யும் வண்ணம்) பசுக்களின் பெருமையை அருளிச்செய்த சிறப்பைக் கீழே கொடுத்துள்ளோம்.

"பசுக்கள் உலகத்திலுள்ள எல்லா உயிர்களைக் காட்டிலும் சிறந்த பெருந்தன்மையுடையன; தூய தீர்த்தங்கள் எல்லாம் என்றும் பொருந்தப்பெற்றன; தேவர் முனிவர் கூட்டங்கள் சூழ்ந்து பிரியாத அங்கங்களையுடையன; சிவபெருமான் திருமுடியில் அபிடேகம் செய்யத்தக்க பஞ்சகவ்வியம் தரும் உரிமையுடையன, சிவபெருமான் திருமேனியில் தரித்துக் கொள்ளத்தக்க திருநீற்றுக்குரிய கோமயத்தை (சாணத்தை)த் தருவன; சிவபெருமானும், உமாதேவியாரும் எழுந்தருளும் இடபதேவரின் குலத்தைச் சேர்ந்தன" இவ்வாறு சிறப்புடைய பசுக்களைக்காத்து வருதலே சிறந்த கடன். இதுவே சிவபெருமானுடைய திருவடியை வழிபடுவதற்கு உரிய நெறியுமாகும் என்று அன்று முதல் விசாரசருமர் பசுக்கூட்டங்களை மேய்க்க ஆரம்பித்தார். இச்செயலே பின்னால் அவர் சண்டேச பதவியைப் பெறும் ஒரு சூழ்நிலையை ஏற்படுத்தியது.

"பழைய காலத்தில் தமிழ்நாட்டில் ஒரு நாட்டின் அரசன் வேறு ஒரு நாட்டின் மேல் படையெடுக்க எண்ணினால் பகைவன் நாட்டிலுள்ள முதியவர்களையும், பெண்களையும், குழந்தை இல்லாதவர்களையும் எச்சரித்து, "நாங்கள் படை எடுக்கப் போகிறோம். நீங்கள் உங்களுக்குப் பாதுகாப்பான இடங்களைத் தேடிக்கொண்டு போய்விடுங்கள்" என்று முரசறையச் செய்வானாம். பகைவர் நாட்டிலுள்ள பசுக்

களுக்கு போரில் தீங்கு நேராமல் இருப்பதற்காக அவற்றை அங்கிருந்து ஓட்டிவந்து விடும்படி செய்வானும். இப்படிச் சில தர்ம நியாயங்கட்கு உட்பட்டுப் போர் நடந்ததனுல் அதைத் தர்மயுத்தம் என்று சொன்னுர்கள். ''அறத்தாறு நுவலும் பூட்கைமறம்'' என்று புறநானூறு இதைக் கூறு கிறது. 'அறவழியைச் சொல்லும் கொள்கையையுடைய வீரம்' என்பது அதன் பொருள். இதிலிருந்து பசுமாடு களைப் பகைவர் நாட்டில் இருந்தாலும் கொல்லலாகாது என்ற எண்ணம் பழந்தமிழர்களுக்கு இருந்தது தெரிய வருகிறது.'' (கலைமகள் அக். 81, தலையங்கப்பகுதி)

தேவீபாகவதம், பிரம்மவைவர்த்தம் போன்ற புராணங்களிலும் பசுவின் மஹிமை வெகுவாகப் பேசப் பட்டுள்ளது. பாற்கடலிலிருந்து காமதேனு தோன்றினுள். அவளுடைய சந்ததி இருக்கும் லோகம் கோலோகம் எனப் படும். ராதாகிருஷ்ணர் அங்கு கோக்களுடனும், கோபிகை களுடனும் ஆனந்தமாக வஸிக்கின்றுர். அந்த தேனுவின் ஸந்ததியே பூலோகத்தில் கோக்களாக இருக்கின்றன. அந்த கோக்களின் பாலினுலும் நெய்யினுலும் வேதமந்தி ரத்தைக்கூறி வேதியர் யாகம் செய்கின்றனர். யாகத் தினுல் மழை, மழையால் உலகம் க்ஷேமம். ஆதலால் எங்கும் **''கோ ப்ராம்மணேப்ய: சுபமஸ்து நித்யம்''**, கோவுக் கும், பிராமணர்களுக்கும் க்ஷேமமுண்டாகட்டும் என்று வேண்டப்படுகின்றது. பகவான் கோப்ராம்மணஹிதர் எனப்படுகிறுர். பசு காமதேனுவின் அம்சமாதலால் மனித குலத்துக்கு பேருபகாரம் செய்கின்றது. நம் உடல் வளர : பால், தயிர், மோர்; புத்தி வளர : வெண்ணெய், நெய்; பயிர் வளர : சாணி, மூத்திரம்; நம்மைப் பரிசுத்தமாக்க : பஞ்சகவ்வியம்; இறைவனுடைய அபிஷேகத்திற்குப் பால் முதலியனவும் பயன்படுகின்றன. இப்படி உடலையும், உயிரையும் தாய் போல் வளர்ப்பதால் பசு **கோமாதா** என்ற ஸ்தானத்தை அடைகின்றது.

காலையில் எழுந்தவுடன் எவருடனும் பேசாமல் ஒருபிடி புல் பசுவுக்குக் கொடுத்தால் மலடியும் பிள்ளை பெறுவாள். கோதானம் மிகவும் உயர்ந்தது. ஒருசமயம் ஜலத்தில் தவம் செய்து கொண்டிருந்த ஒரு மஹரிஷியை செம்படவர்கள் மீன்என்று எண்ணி, வலையால் இழுத்து கரையில் கொண்டு வந்தனர். முனிவர் எனத்தெரிந்தபின் வருந்தி மன்னிப்பு கேட்டனர். தன்னை மீன் என்று எண்ணி தான் மீன் அல்லாத தால் ஏமாந்த செம்படவர்களின் கஷ்டத்திற்கு ஈடாக தனம் பெறும்படி ஒரு உபாயம் சொன்னார். அந்த தேசத்து அரசனிடம் சென்று தனக்குச் சமமான பொருளைப் பெற்றுக் கொண்டு, தன்னிடம் காட்டிப் போகும்படிச் சொன்னார். அவர்கள் அப்படியே அரசனிடம் சென்று சொன்னார்கள். அவ் வரசன் ஆயிரம் ரூபாய் தந்தான். முனிவர் நான் இவ்வளவு தானா பெறுவேன் என்றார். அரசன் பதினாயிரம் தந்தான். அப்பொழுதும் அப்படியே சொன்னார். லக்ஷம், கோடி, பாதி ராஜ்யம், முழுராஜ்யம் முதலியவை ஒன்றன்பின் ஒன்றாக அரசன் அளித்தான். அப்பொழுதும் இந்த ரிஷி இவ்வளவு தானா பெறுவேன் என்றார். அப்பொழுது கவிஜாதகர் என்ற முனிவர் வந்து, ராஜன்! கன்றுடன் கூடிய ஒரு பசுவை அளி என்றார். அப்படிச் செய்த பொழுது முனிவர் எழுந்து இந்த கோவின் பதினாறில் ஓர் அம்சத்திற்குக் கூட நான் ஸமமல்ல என்றார். ஒரு கோ ஸமஸ்த ராஜ்யத்தையும்விடச் சிறந்த தென்று விளங்குகிறதல்லவா?

பசுவின் பாததூளி மேலே பட்டால் வாயவ்ய ஸ்நானம் செய்த புண்ணியம் உண்டாகும். கோதூளி பட்ட அன்னத்தைச் சாப்பிடாமல் தூரே எறிந்த பாபத்தால் ஒரு சிறந்த ஸன்னியாசி சண்டாளனாகப் பிறந்தார். பசுவுக்குப் பணிவிடை செய்து திலீபன் என்ற அரசன் ரகு என்ற புதல்வனைப் பெற்றான். திலீபனது அச்வமேத குதிரையைத் தூக்கிச் சென்று தேவேந்திரன் மாயத்தால் மறைத்தான். அந்த குதிரையை ரக்ஷிக்கச் சென்ற ரகு மஹாராஜன் கோமயத்தினால் கண்களைத் துடைத்துக் கொள்ள தேவேந்

திரனின் மாயை அகன்று குதிரையுடன் அவனிருந்த இடம் தெரிந்தது. கோவின் பின்புறத்தைத் தொட்டு கண்ணில் ஒத்திக் கொண்டால் கங்கா ஸ்நான பலன் கிடைக்கும்.

பிரம்ம சிருஷ்டியில் உலகம் உய்ய முதலில் பசுவைப் படைத்து அதனுடலில் பதினுன்கு உலகையும், முப்பத்து முக்கோடி தேவதைகளையும் பிரம்மதேவன் இருக்கச் செய்தான். எல்லோரும் உடலெங்கும் குடியேறினுர்கள். மஹாலக்ஷ்மியும், கங்கையும் தாமதமாக வந்தார்கள். பசுவின் உடலில் இவர்களுக்கு இடமில்லே. எங்கேயாவது இருக்க ஒரு இடம் கொடுத்தால் போதும் என்று அந்த இருவரும் கோமாதாவைக் கெஞ்சினுர்கள் பசு சொல்லியது: — "தாய்மார்களே! உங்கள் மீது எனக்கு அனுதாபம் இருக்கிறது. ஆனுல் இடமில்லேயே நான் என் செய்வேன்? ஒன்று வேண்டுமானுல் செய்யுங்கள். என் உடலிலிருந்து வரும் சாணம், கோமயம் இவை இரண்டும் யாருக்கும் சொந்தம் ஆகவில்லே. நீங்கள் விரும்பினுல் அதிலிருக்கலாம்'' என்று கூற, லக்ஷ்மியும், கங்கையும் அந்த இடத்தில் மிகவும் சந்தோஷத்துடன் வசிக்க ஆரம்பித்தார்கள். பசுவின் பின்புறத்தில் லக்ஷ்மியும் கங்கையும் இருப்பதால் அதன் சாணமும், கோமயமும் ஸகல பாபமும் போக்கி லக்ஷ்மீ கடாக்ஷம் அளிக்கவல்லது என்கிறது சாஸ்திரம். பசுவைப் பூஜை செய்தால், பிரதக்ஷிண நமஸ்காரம் செய்தால் மூன்று உலகையும் பிரதக்ஷிணம் செய்த புண்ணியம் கிடைக்கும். பசு ஈன்று கொண்டிருக்கும் சமயம், முன்னும் பின்னும் இருமுகமாக இருக்கும் போது பிரதக்ஷிணம் வந்து தீபாராதனே செய்து நமஸ்கரித்தால் அளவிடமுடியாத புண்ணியம். கௌதமர் என்ற மஹரிஷி கோபூஜை செய்து கடைத்தேறினுர் என்று சொல்லப் படுகிறது.

மதுரையில் திருஞானசம்பந்தருக்கும், சமணருக்கும் வாதம் ஏற்பட்டது. தமது சமயக்கொள்கைகளே ஏட்டில் எழுதி வையையாற்றில் விடுவதென்றும், ஆற்று வெள்ளத்

தில் அடித்துச் செல்லாது எதிர்த்து செல்லும் ஏடே மெய்ப் பொருளை உடையது என்றும் வாதத்திற்கு வரையறை செய்யப்பட்டது. முதலில் சமணர்கள் தங்கள் கொள்கை களை எழுதி ஆற்றில் விட்டனர். உள்ளீடில்லாத பதடி போன்ற சமணர்களது கொள்கைதாங்கிய ஏடு ஆற்றிலே அடித்துச் செல்லப்பட்டது. பின்னர் திருஞானசம்பந்தர் உலகியல் என்பது வேதம் கூறும் ஒழுக்கமே என்பதனையும் வீடுபேறு அடையும் நெறி சிவநெறியே என்பதனையும் விளக்கி பன்னிரண்டு திருப்பாடல்களைக் கொண்ட திருப் பாசுரத்தை அருளிச்செய்து ஏட்டில் எழுதுவித்து அந்த ஏட்டினை வைகையாற்றில் இட்டருளினர். அந்த ஏடு வைகையாற்றின் வெள்ளத்தினை எதிர்த்துச் சென்றது. சிவ பெருமானே முழு முதற் கடவுள் என்று திருஞான சம்பந்தருக்கு வெற்றியைக் கொடுத்த அந்த திருப்பாசு ரத்தின் முதற்பாடலில் பசுக்களை வாழ்த்தியருளியமை கண்டு இன்புறத் தக்கது.

வாழ்க அந்தணர்; வானவர்; **ஆனினம்;**
வீழ்க தண்புனல்; வேந்தனும் ஓங்குக;
ஆழ்க தீயதெல்லாம்; அரன் நாமமே
சூழ்க; வையக முந்துயர் தீர்கவே.

ஆனினம் என்பது பசுக் கூட்டங்களைக் குறிக்கும். இங்ஙனம் பசுக்கூட்டங்களைத் திருஞானசம்பந்தர் வாழ்த்தியதற்குக் காரணம் அவைகள் இறைவனார் பூசைக்கும், அந்தணர்கள வேள்விக்கும் உரிய பாலை அளிப்பது தான் என்றுசேக்கிழார் பெருமான் விளக்கியுள்ளார்.

எந்த பிராயத்தினருக்கும் பசும்பால் சிறந்த உண வாகிறது. உணவு மட்டுமல்ல, அது பல நோய்களைத் தீர்ப் பதற்கு மருந்தாகவும், மருந்துகளுக்கு அநுபானமாகவும் மனிதர்களுக்குப் பயன்படுகிறது. இளைஞர்களுக்கும், பெரி யோர்களுக்கும் அருந்த பசுவின் பாலை விடச் சிறந்தது வேறொன்றுமில்லை, முக்குண தோஷத்தையும் பெற்றிருக்

காதது, உண்டாக்காதது. பசுவின் பாலே என்று சுச்ருதர் என்ற ஆயுர்வேத ஆசிரியர் கூறுகிறார். தேவ மருத்துவர்களாகிய அச்வினி தேவர்களுக்கே பால் ஆரோக்கியத்தை அளிக்கிறது. நம் நல்வாழ்வுக்காக பசு வர்க்கம் வாழட்டும் என்று ரிக்வேதம் வாழ்த்துகிறது. பசுவுக்கு புல்லையே சாப்பிடக் கொடுங்கள். அதற்கு நல்ல புல்லையும் சுத்தமான நீரையும் கொடுப்பது அதை வளர்ப்பவர்களின் கடமை. அப்போது தான் அது நம் ஆரோக்கியத்தை வளர்க்கும் பாலைக் கொடுக்கும் என்று மேலுங் கூறுகிறது ரிக்வேதம்.

> எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
> செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

என்று திருவள்ளுவர் கூறுகின்றார். இதன்பொருள் எந்த தருமங்களைச் சிதைத்தவர்களுக்கும் பாவத்தின் நீங்கும் வழி உள்ளது. ஒருவன் செய்த நன்றியைச் சிதைத்தவனுக்கு அத்தகைய பாவத்தின் நீங்கும் வழி இல்லையாம் என்பதாகும்.

வேதங்களாலும், புராணங்களாலும் போற்றப்படுவதும், மக்கட்குலம் முழுமைக்கும் தாயாக இருக்கும் பெருமையாலும், கோமாதா ஆகிற பசுமாட்டை பால் தருகிறவரை காப்பாற்றுவதும் பால் மரத்தபின்னர் மாட்டுக்காரர்களிடம் கிடைத்த விலைக்கு விற்றுவிடுதலும் செய்ந்நன்றி மறத்தல் என்னும் பெரும் குற்றமாகும். "பெற்று வளர்த்து ஆளாக்கிய உங்கள் மகன் வயதான காலத்தில் உங்களைக் கவனியாமல் விட்டுவிட்டால் உங்கள் மனது என்ன பாடுபடும்? பாலூட்டித் தாலாட்டி மார்பில் சாய்த்து வளர்த்தேனே!" என்று எண்ணி மருகுவீர்கள் அல்லவா? என்று கேட்கின்றார் கலைமகள் உதவியாசிரியர் திரு S. V. ரமணி அவர்கள் தமது ஆனிரைக்கோர் ஆலயம் என்ற சட்டுரையில் (கலைமகள்—அக்டோபர் 1981).

ஆதிசங்கர பகவத்பாதர்கள், அனைவருக்கும் அன்னை என்று மதித்த பசுக்களுக்கும் இந்த அவலநிலை வரலாமா

என்று எண்ணிய அதே பரம்பரையில் வந்த ஸ்ரீகாஞ்சி காமகோடி பெரியவர்கள் மாம்பலம் ஸ்ரீசங்கர மடத்துக்குப் பின்புறம் **கோ ஸம்ரக்ஷண சாலா** என்ற பசுக்காப்பு இல்லத்தைத் தொடங்கியுள்ளார்கள். ஜகத்குரு ஸ்ரீஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளின் ஆணையுடன் 19-8-77ல் நான்கு பசுக்களுடன் ஓய்வு பெற்ற நீதிபதி திரு. கிருஷ்ணஸ்வாமி ரெட்டியாரின் தலைமையில் தொடங்கிய இவ்வில்லம் மிகவும் சிறப்பாக இயங்கிவருகிறது. சென்னையில் மட்டுமல்ல, பல நகரங்களிலும் இத்தகைய பசுக்காப்பு இல்லங்களை அமைக்க வேண்டும் என்று இந்த இல்லத்தின் காரியதரிசி திரு. கிருஷ்ணமூர்த்தி வேண்டிக் கொள்கிறார். உலக சுபிக்ஷத்திலும், மக்களின் முன்னேற்றத்திலும் அக்கறை கொண்ட ஜகத்குரு மஹாசந்நிதானம் அவர்களின் அருளாணைப்படி இயங்கிவரும் இந்த பசுக்காப்பு இல்லத்துக்கு பணமாகவும். பண்டமாகவும் உதவ வேண்டுவது நமது கடமை. பிண்ணாக்கு, தவிடு, வைக்கோல், புல்கட்டு, அகத்திக்கீரை என்று இப்படி அளிக்கலாம்.

தற்சமயம் கோ சாலையில் 28 பசுமாடுகள் காக்கப்படுகின்றன. ஒவ்வொரு வெள்ளிக்கிழமை மாலையும் பளிச் சென்று குங்குமப் பொட்டுடன் லக்ஷ்மீகரத்துடன் விளங்கும் இந்தப் பசுக்களுக்கு பூஜையும், நைவேத்தியமும் நடைபெறுவது கண்கொள்ளாக் காக்ஷியாகும். இந்தப் புனிதப் பணிக்கு ஆகும் செலவு ரூ 20/— என்று கூறப்படுகிறது. அன்பர்கள் விரும்பினால் தங்களது உபயமாக நடத்தி வைக்கலாம். மாட்டுப் பொங்கல் போன்ற வருஷாந்திர நிகழ்ச்சிகளும் நடைபெற்று வருகின்றன. வேள்வி போன்ற இந்த சிறந்த காரியம் பொது ஜனங்களின் நன்கொடைகளினாலும், மாதாந்திர கார்டு வசூல்களினாலும், வெளியூர் அன்பர்களின் தாராளமான நன்கொடைகளினாலும் நடத்தப்பட்டு வருகிறது.

பசு மாடுகளுக்காக ஆகும் தீனிச் செலவு, வேலையாட்கள் ஊதியம், மருந்துச்செலவு முதலியவைகளைக் கணக்கிட்டால்

மாதம் ஒன்றுக்கு சுமார் ரூபாய் மூன்ருயிரம் செலவா கின்றது. ஆகையால் நன்கொடைகள் வரவேற்கப் படு கின்றன. பசுமாடுகளுக்கு ஆஹாரம் மட்டும் கொடுத்தால் போதுமா? அவைகளே வெயில், மழை முதலியவை களினின்றும் பாதுகாப்பாகக் கட்டி வைக்கத் தொழுவங்கள் வேண்டுமல்லவா? இதனை உணர்ந்து ஒரு மாட்டுத் தொழு வத்தை சிறந்த முறையில் ஸ்ரீமான் R. ராஜு அவர்கள் (Raju Estates, Madras—17) சுமார் ரூ 10,000/— தமது சொந்த செலவில் தமது தாயார் ஸ்ரீமதி T. V. சேது அம்மாள் அவர்களின் சதாபிஷேக நினைவாகக் கட்டிக் கொடுத்து உள்ளார். இன்னொரு மாட்டுத் தொழுவமும் இதே அளவு செலவில் தேவைப்படுகிறது. அதை நன்கொடைகள் மூலம் கட்ட முயற்சி எடுத்துக் கொண்டுள்ளார்கள். திரு, சுதாகர் அவர்கள் (உம்மிடியார்ஸ்) ஒரு பம்பு மோட்டாரும், திரு ராதாகிருஷ்ணன், திரு. S. மஹாதேவன் அவர்கள் தண்ணீர்த் தொட்டியும் ஏற்பாடு செய்துள்ளார்கள். இம் மாதிரி உதவிகளும் வரவேற்கப்படுகின்றன. கறவை அற்ற வயதான பசுக்களைக் கடைசிவரை காப்பாற்ற முடியாத வர்கள் அந்த மாடுகளை அடிமாட்டிற்கு விடுவதோ, விலைக்கு விற்பதோ போன்ற பாபகரமான செயல்களைச் செய்யாமல் இந்த கோ ஸம்ரக்ஷண சாலைக்குத் தெரியப் படுத்தினுல் அவைகளை ஆயுள்பர்யந்தம் காப்பாற்ற ஏற்பாடு செய் வார்கள். வசதியுள்ளவர்கள் நன்கொடையளிக்கலாம். ஆனுல் அது கட்டாயமில்லை. பசுக்கள் காக்கப்பட வேண்டு வது தான் கட்டாயம் என்கிருர் திரு. ராஜு அவர்கள்.

இந்த நல்ல காரியத்தில் அனைவரும் உதவலாம். போஷகர் (ரூ 1000/—மும், அதற்கு மேலும்), ஆயுள் அங்கத்தினர் (ரூ 250+25), வருஷ சந்தா (ரூ 100/=) மாதச் சந்தா (2, 5, 10, 25) இப்படிச் செலுத்தி இந்த புண்ணியத் தில் பங்கு பெறலாம். இந்தப் பசுப்பாதுகாப்பு இல்லத் திற்கு அளிக்கப்படும் தொகை வருமானவரி விலக்குப் பெறு கிறது. நன்கொடை அளிப்பவர்கள் திரு R. ராஜு,

பொருளாளர், கோ ஸம்ரக்ஷண சாலை, C/o M/s. Raju Estates, 15, Balaji Avenue, Madras-17 அவர்களுடன் தொடர்பு கொள்ளலாம்.

இப்பணியை தற்பொழுது திறம்பட நடத்தும் நிர்வாகக் குழுவினர் :

தலைவர்:— நீதிபதி திரு. S. மோஹன் அவர்கள்.

காரிய தரிசி:— திரு. P. கிருஷ்ணமூர்த்தி அவர்கள்.

பொருளாளர்:— திரு. R. ராஜு அவர்கள்.
(Raju Estates)

உபதலைவர்கள்:— திரு. V. பலராமன் அவர்கள்.
(ஹிக்கின்பாதம்ஸ்)
திரு. S. S. ராஜகோபால ஐயர் அவர்கள்.
திரு N. வைத்தியநாதஸ்வாமி ஐயர் அவர்கள்.
திரு. கிஷின்சந்த் சோர்டியா அவர்கள்.

"பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும் நற்றவவானினும் நனி சிறந்தனவே" என்பதில் பெற்ற தாயைப் போலச் சிறந்ததாகக் கருதப்படுகிற கோமாதாவையும் சேர்த்துக் கொள்ளலாம் அல்லவா?

[கலைமகள் அக்டோபர்—1981 இதழ், ஸ்ரீ ராமசமாஜ் 1982 ஆண்டு மலர், வேதபாராயண சபா 1977ம் ஆண்டு மலர், சேக்கிழார் பெரியபுராணம், ஜகத்குருவின் உபதேசங்கள் முதல் பாகம், பல புராண இதிஹாசச் செய்திகள் மற்றும் திரு S. S. ராஜகோபாலய்யர் அவர்கள் அளித்த சில புள்ளி விவரங்கள் ஆகியவைகளின் அடிப்படையில் இக் கட்டுரை தொகுக்கப்பட்டது.]

சிவம்.

மாதம் ஒன்றுக்கு சுமார் ரூபாய் மூன்ருயிரம் செலவா கின்றது. ஆகையால் நன்கொடைகள் வரவேற்கப் படு கின்றன. பசுமாடுகளுக்கு ஆஹாரம் மட்டும் கொடுத்தால் போதுமா? அவைகளை வெயில், மழை முதலியவை களினின்றும் பாதுகாப்பாகக் கட்டி வைக்கத் தொழுவங்கள் வேண்டுமல்லவா? இதனை உணர்ந்து ஒரு மாட்டுத் தொழு வத்தை சிறந்த முறையில் ஸ்ரீமான் R. ராஜு அவர்கள் (Raju Estates, Madras—17) சுமார் ரூ 10,000/— தமது சொந்த செலவில் தமது தாயார் ஸ்ரீமதி T. V. சேது அம்மாள் அவர்களின் சதாபிஷேக நினைவாகக் கட்டிக் கொடுத்து உள்ளார். இன்னொரு மாட்டுத் தொழுவமும் இதே அளவு செலவில் தேவைப்படுகிறது. அதை நன்கொடைகள் மூலம் கட்ட முயற்சி எடுத்துக் கொண்டுள்ளார்கள். திரு, சுதாகர் அவர்கள் (உம்மிடியார்ஸ்) ஒரு பம்பு மோட்டாரும், திரு ராதாகிருஷ்ணன், திரு. S. மஹாதேவன் அவர்கள் தண்ணீர்த் தொட்டியும் ஏற்பாடு செய்துள்ளார்கள். இம் மாதிரி உதவிகளும் வரவேற்கப்படுகின்றன. கறவை அற்ற வயதான பசுக்களைக் கடைசிவரை காப்பாற்ற முடியாத வர்கள் அந்த மாடுகளை அடிமாட்டிற்கு விடுவதோ, விலைக்கு விற்பதோ போன்ற பாபகரமான செயல்களைச் செய்யாமல் இந்த கோ ஸம்ரக்ஷண சாலைக்குத் தெரியப் படுத்தினல் அவைகளை ஆயுள்பர்யந்தம் காப்பாற்ற ஏற்பாடு செய் வார்கள். வசதியுள்ளவர்கள் நன்கொடையளிக்கலாம். ஆனல் அது கட்டாயமில்லை. பசுக்கள் காக்கப்பட வேண்டு வது தான் கட்டாயம் என்கிருர் திரு. ராஜு அவர்கள்.

இந்த நல்ல காரியத்தில் அனைவரும் உதவலாம். போஷகர் (ரூ 1000/—மும், அதற்கு மேலும்), ஆயுள் அங்கத்தினர் (ரூ 250+25), வருஷ சந்தா (ரூ 100/=) மாதச் சந்தா (2. 5, 10, 25) இப்படிச் செலுத்தி இந்த புண்ணியத் தில் பங்கு பெறலாம். இந்தப் பசுப்பாதுகாப்பு இல்லத் திற்கு அளிக்கப்படும் தொகை வருமானவரி விலக்குப் பெறு கிறது. நன்கொடை அளிப்பவர்கள் திரு R. ராஜு,

பொருளாளர், கோ ஸம்ரக்ஷண சாலை, C/o M/s. Raju Estates, 15, Balaji Avenue, Madras-17 அவர்களுடன் தொடர்பு கொள்ளலாம்.

இப்பணியை தற்பொழுது திறம்பட நடத்தும் நிர்வாகக் குழுவினர் :

தலைவர்:— நீதிபதி திரு. S. மோஹன் அவர்கள்.

காரிய தரிசி:— திரு. P. கிருஷ்ணமூர்த்தி அவர்கள்.

பொருளாளர்:— திரு. R. ராஜு அவர்கள்.
(Raju Estates)

உபதலைவர்கள்:— திரு. V. பலராமன் அவர்கள்.
(ஹிக்கின்பாதம்ஸ்)
திரு. S. S. ராஜகோபால ஐயர் அவர்கள்.
திரு N. வைத்தியநாதஸ்வாமி ஐயர் அவர்கள்.
திரு. கிஷின்சந்த் சோர்டியா அவர்கள்.

"பெற்ற தாயும் பிறந்த பொன்னுடும் நற்றவவானினும் நனி சிறந்தனவே" என்பதில் பெற்ற தாயைப் போலச் சிறந்ததாகக் கருதப்படுகிற கோமாதாவையும் சேர்த்துக் கொள்ளலாம் அல்லவா?

[கலைமகள் அக்டோபர்—1981 இதழ், ஸ்ரீ ராமசமாஜ் 1982 ஆண்டு மலர், வேதபாராயண சபா 1977ம் ஆண்டு மலர், சேக்கிழார் பெரியபுராணம், ஜகத்குருவின் உபதேசங்கள் முதல் பாகம், பல புராண இதிஹாசச் செய்திகள் மற்றும் திரு S. S. ராஜகோபாலய்யர் அவர்க்ள் அளித்த சில புள்ளி விவரங்கள் ஆகியவைகளின் அடிப்படையில் இக்கட்டுரை தொகுக்கப்பட்டது.]

சிவம்.

உ
சிவமயம்
ஸ்ரீ மஹாதேவஜயம்,

# ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரர் ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதேந்த்ரர் திவ்ய சரித ஸங்க்ரஹம்.

**தர்மப்ரவசன ரத்னம் உத்தம உபன்யாசக சக்ரவர்த்தி**
பிரம்மஸ்ரீ மஞ்சக்குடி K. ராஜகோபால சாஸ்திரிகள்
**எழுதியது**

## தோற்றுவாய்

சிவகிருபையினுல் இவ்வுலகின்கண் பிறந்து வளர்ந்து வரும் ஜீவகோடிகள் சிவகிருபையினைப் பெறும் உபாயம் தெரியாமல் பலவித துன்பங்களை அடைந்து தவிக்கும் நிலையினை உணர்ந்து, பரம கருணையின் பேரில் உலகுக்குப் பேரின்ப ஸுகத்தை அடையும் வழியைக்காட்டத் தனது அம்சத்தினுல் சிவப்பெருமானே பல உருக்கொண்டு இக் கலியுகத்தில் மக்கள் சிவபிரஸாதம் பெற்று வாழப்பேருதவி செய்கின்றார். இதைத்தான் **சி**வனருள் என்று அடியார்கள் போற்றுகின்றார்கள். மனித சமுதாயத்தின் கஷ்டம் எழுத்தாலோ சொல்லாலோ இவ்வளவுதான் என்று விளக்க முடியாதது. எனவே துன்பத்தைத் துடைக்கவரும் சிவ ஸ்வரூபத்தை அறிந்து நாமும் துன்பத்திலிருந்து விடுதலையடைவோம்.

**महितकविवरेण्यव्याहृति श्लाघ्यभावं**

**निहितविबुधवृत्तं शाम्भवप्राभवाढ्यम् ।**

विहितविविधधर्मावेदकं सच्चरित्रं
पिहितकुमतिचेष्टं सञ्चिनोतु श्रियं नः ॥

மஹிதகவி வரேண்ய வ்யாஹ்ருதி ச்லாக்யபாவம்
நிஹித விபுதவ்ருத்தம் சாம்பவப்ராபவாட்யம் |
விஹிதவிவிததர்மாவேதகம் ஸச்சரித்ரம்
பிஹிதகுமதிசேஷ்டம் ஸஞ்சிநோது ச்ரியம் ந: ||

மஹாமகிமை பொருந்திய கவியின் வாக்யங்களைக் கொண்டாடுவதும், தேவர்களின் சரிதமும், சிவமஹிமையும், பலதர்மங்களைத் தெரிந்து கொள்ளவும் அறியாமையைப் போக்கவும் பேருதவிசெய்கிறது. எனவே அந்த புண்ய சரித்திரத்தையே வணங்குவோம். அது நமக்குச் சகல மங்களங்களையும் கொடுக்கும்.

## வக்ஷஸ்தலாசாரியார்

புண்ணியம் செய்து பிறந்து வசிக்கும் உத்தமர்களுடன் பிரகாசிக்கும் துண்டீர (தொண்டை) மண்டலம் என்ற நாட்டுக்கு அமராவதி போலவும், பாரத பூமிக்கு ஒட்டியாணம் போலவும் காஞ்சீபுரம் என்ற பெயருடைய ராஜதானி உள்ளது அதில் கருணாஸமுத்ரமான ஸ்ரீ ஏகாம்ரநாதரும், கல்பதரு-சிந்தாமணியான ஸ்ரீ காமாக்ஷியும் ஸாந்நித்யமாகி பக்தர்களுக்கு அருள்பாலிக்கிறார்கள். இந்த புண்யபுரியின் ஸமீபத்தில் ஆரணி என்ற நகரம் உள்ளது. அதன் ஸமீபத்தில் அடையப்பலம் என்ற ஒரு சிறு கிராமம் உள்ளது. அந்த கிராமத்தில் ஆசாரம், அனுஷ்டானம், எப்போதும் அக்னிஹோத்ரம், இஷ்டி, யாகம், அதிதி ஸத்காரம் போன்ற புண்ணிய காரியங்களைச் சிரத்தையுடன் செய்துவரும் வித்வான்கள், கவிதா ஸாமர்த்யம், ஸகல பாஷாஞானம், ஸகலவேதசாஸ்த்ர ஸம்பத்துடன் விளங்கி வந்தார்கள். அங்கு வசித்துவந்த ஜனங்களுடைய பாண்டித்யம் பிருஹஸ்பதி, வஸிஷ்டரிஷி போன்ற மஹரிஷிகளும் போற்றும்படி விளக்கத்துடன் இருந்தது.

இத்தகைய பெருமைகள் வாய்ந்த அந்த அடையப்பலம் என்ற கிராமத்தில் வக்ஷஸ்தல கணபதியை உபாசனம் செய்து கொண்டு இருக்கும் பாரத்வாஜ கோத்திரத்தில் பிறந்த **ஆசார்யதீக்ஷிதர்** என்ற பெயருடன் அத்வைத சாஸ்த்ர உபதேசகர் ஒருவர் இருந்தார். அவர் விஜயநகர ராஜாவான கிருஷ்ணதேவராயரது ஆஸ்தான வித்வானக அவரால் மிகவும் போற்றப்பட்டு வந்தார். ஒரு சமயம் ராஜா கிருஷ்ணதேவராயர் தன் மனைவி ராணியுடன் காஞ்சீ புரம் வந்து வரதராஜ ஸ்வாமியை சேவித்துக் கொண்டிருக்கும் போது, ராஜா வந்திருக்கும் விவரமறிந்த ஆசார்ய தீக்ஷிதரும் அவ்விடம் வந்தார். அரசர் தீக்ஷிதரைக்கண்டதும் வரதராஜரை ஒரு பத்யத்தினல் ஸ்தோத்ரம் செய்யும்படிக் கூறினர். தீக்ஷிதரும் வரதராஜரை வணங்கி உடனே ஒரு சுலோகத்தைச் செய்தார்.

**काञ्चित्काञ्चनगौराङ्गीं वीक्ष्य साक्षादिव श्रियम् ।**
**वरदस्संशयापन्नः वक्षस्थलमवेक्षते ॥**

**காஞ்சித்காஞ்சன கௌராங்கீம் வீக்ஷ்ய ஸாக்ஷாதிவ ச்ரியம் |**
**வரதஸ்ஸம்சயாபந்ந: வக்ஷஸ்தலமவேக்ஷதே ॥**

இது மிகவும் அற்புதமான ஸந்தேஹ அலங்காரம். அதாவது (1) வரதராஜர் எதிரே இருக்கும் அரசரின் மனைவியைப் பார்த்ததும், நமது லக்ஷ்மி இங்கே எப்படி வந்தாள்? நமது மார்பிலே அல்லவா இருந்தாள்? மார்பில் இருக்கிருளா? இல்லையா? என்று தன் மார்பைப் பார்த்தார். அல்லது (2) இந்த ராஜாவின் மனைவி அழகியா? நம் லக்ஷ்மி அழகியா? என்றும் தன் மார்பைப் பார்த்தார். அல்லது (3) தனக்குச் சமமான அழகியே இவ்வுலகில் எங்கும் கிடையாது என்று நினைக்கும் லக்ஷ்மிதேவி இவளைப் பார்த்து என்ன நினைக்கிருள்? என்றும், (4) இந்த ராஜபத்தினியையும் நமது மார்பில் வைத்துக்கொள்ள இடம் ஏது என்றும் இப்படிப்பலவித ஸந்தேஹத்துடன் வரதராஜர் தனது

மார்பைப் பார்க்கிறுர் என்று ஆசார்ய தீக்ஷிதர் இந்த சுலோகத்தின் மூலம் கூறினுர். இதைக் கேட்டு அரசர் பரமானந்தத்தை அடைந்து, ஆசார்யதீக்ஷிதருக்கு வக்ஷஸ்த லாசார்யர் என்ற பிருதைச் சூட்டினுர்.

## ரங்கராஜாத்வரி

வக்ஷஸ்தலாசார்யர் என்ற இந்த மஹானுக்கு இரண்டு மனைவிகள் இருந்தார்கள். ஒவ்வொருவருக்கும் நான்கு பிள்ளைகள் பிறந்தார்கள். இவர்களில் மூத்தவரான ரங்க ராஜாத்வரி என்றவர்தான் ஸ்ரீமத் அப்பய்யதீக்ஷிதர் அவர் களின் தந்தையாராவர். ரங்கராஜாத்வரி 'அத்வைத வித்யா முகுர விவரணப்ரகாசம்' முதலான கிரந்தங்களை இயற்றியவர். இவரது மாதாமஹர் (தாயின் தந்தை) வைஷ்ணவகுலத்தைச் சேர்ந்த ஸ்ரீ வைகுண்டாசார்யர் என்பவராவர். அந்தக் காலம் ஸ்மார்த்த-வைஷ்ணவ பேதமில்லாமல் ஸ்நேஹமாக இருந்தமையால் வக்ஷஸ்தலா சாரியர் அந்த வைஷ்ணவரின் பெண்ணை மணந்து கொண்டார். அந்த வைஷ்ணவ மனைவிக்குப் பிறந்த பிள்ளை தான் ரங்கராஜாத்வரி. மாமனுர் இஷ்டப்படி பெயர் வைத்தபடியால் வைஷ்ணவப் பெயருடன் விளங் கினுர். வக்ஷஸ்தலாசாரியார் கலிபிறந்து 4630-ம் ஆண்டு சிவஸாயுஜ்யம் அடைந்தார்.

## ஸ்ரீமார்க்கஸஹாயப் பெருமானின் அனுக்கிரஹம்

அந்த ஸமயம் இந்த நாட்டை சின்னவீரப்ப நாயகரின் புத்ரர் சின்னபொம்ம ராஜா ஆண்டு வந்தார். சிற்றரசர் களான ஸ்ரீகாளஹஸ்தி, ஸ்ரீவேங்கடகிரி, கார்வேடி முதலிய தேசத்து ராஜாக்கள் வித்வான்களை ஆதரித்து வந்தனர். நமது ஸ்ரீரங்கராஜாத்வரியையும் இவர்கள் ஆதரித்து வந்தனர். ஸ்ரீரங்கராஜாத்வரியின் வயது இருபத்து நான்கு தான் என்ருலும் உசிதகாலத்தில் விவாஹமாகி இல்லறம் நடத்தி வரும்போது குழந்தை பிறக்கவில்லையே என்று

மிகவும் வருந்தி, ஸ்ரீமரகதவல்லி ஸமேத ஸ்ரீமார்க்க ஸஹாய ரான தனது குலதெய்வத்தை வேண்டினர். சிவபெருமான் ஸ்ரீ மரகதவல்லி சமேத ஸ்ரீ மார்க்கஸஹாயர் என்ற பெயருடன் விரிஞ்சிபுரம் என்ற க்ஷேத்திரத்தில் அருள் பாலிக்கும் மூர்த்தியாக விளங்குகின்றார். சிவபெருமான் எங்குக் கோயில் கொண்டாலும், அங்கு ஒரு திருநாமம் ஏற்று நாமரூபமில்லாத மூர்த்தியாக ஞானிகளுக்கும், நாம ரூபத்தை ஏற்று ஒன்றும் அறியாத மனித சமூகத்திற்கும் தமது திருவருளைப் பொழிகின்றார். பிள்ளைப்பேறுவேண்டிய ஸ்ரீரங்கராஜாத்வரிக்கு பரம கருணையுடன் ஸ்ரீமார்க்க ஸஹாயர் அசரீரியாக "குழந்காய் ரங்கராஜ! சிதம்பரத்தில் உனக்கு அருள்புரிகின்றேன். நீ அங்கு வருவாயாக" என்று அருளிச்செய்தார். இந்த அசரீரி வாக்கைக் கேட்ட ஸ்ரீரங்க ராஜாத்வரி ஆனந்தத்தில் மூழ்கினர்.

## சிதம்பரத்தில் ஸ்ரீநடராஜர் அனுக்கிரஹம்

அசரீரி வாக்குகேட்ட ஸ்ரீரங்கராஜாத்வரி உடனே மனைவியுடன் சிதம்பரம் சென்றார். அவர்கள் சிதம்பரம் சென்றவுடன் அவர்களது புத்ரலாப ப்ரதிபந்தகம் அவர்களை விட்டு விலகியது. அந்த தம்பதிகள் தினந்தோறும் சிவகங் கையில் ஸ்நானம் செய்து மூன்று வேளைகளிலும் சிவதரிசனம் செய்து ஸ்ரீநடேசப்பெருமானை ஆராதனம் செய்தார்கள். இப்படி ஐந்துவருஷம் சென்றது. நாள்தோறும் நடராஜ மூர்த்தியின் சன்னிதியில் இருந்து இந்த தம்பதிகள், "ஹே ப்ரபோ! எங்களிடம் எப்போது கருணைவைக்கப்போகிறீர் கள்" என்று மனமுருக வேண்டினர்கள். ஒருநாள் இம் மாதிரி மனங்கரைந்து திருவருளைவேண்டிப் பிரார்த்தித்து நின்ற அந்த தம்பதிகட்கு திடீரென்று ஆகாசத்தில் ஒரு சத்தம் கேட்டது. "ஹே பக்தசிகாமணியே! உன்னுடைய தவத்தினால் நான் மனம் மகிழ்ந்தேன். உனக்குச் சீக்கிர மாகப் புத்திரர்கள் இருவரும், பெண் ஒருத்தியும் பிறக்கப் போகிறார்கள்" என்று அருளிச்செய்தார். இதனைக் கேட்டு

ஆனந்தம் அடைந்த ஸ்ரீரங்கராஜாத்வரி தனது இல்லம் சேர்ந்து அன்று இரவு இருக்கும்போது ஸ்ரீநடராஜப் பெருமான் பூஜகர் உருவத்தில் வந்து பகவானின் அபிஷேக தீர்த்தம் என்று கூறி பழரசத்தைச் சாப்பிடும்படி ஸ்ரீரங்க ராஜாத்வரியின் பத்தினியிடம் கொடுத்து மறைந்தார். அந்தப் பழரசத்தை அந்த அம்மையார் சாப்பிட்டதும் சிவபெருமானின் திருவருளால் கர்ப்பம் ஏற்பட்டது.

## தீக்ஷிதேந்திரரின் திருவவதாரம்

ஸ்ரீநடராஜப் பெருமானின் திருவருளால் கர்ப்பம் தரித்து, பத்து மாதங்கள் பூரணமாக ஆனதும் ஒரு பிரமாதீச வருஷத்தில், புரட்டாசி மாதம், சோமவாரம், கிருஷ்ணபக்ஷம் பிரதமை உத்திரட்டாதி நக்ஷத்திரத்தில் ஸாத்விக வேளையில் கன்யா லக்னத்தில் மஹாபாக்கியமான புண்ணிய ஸமயத்தில் ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் திரு அவதாரம் செய்தார்கள். இது கலிவருஷம் 4634 என்றும், ஆங்கில ஆண்டு 1554 என்றும் ஸ்ரீசிவானந்தயோகி என்பவர் தமது தீக்ஷிதேந்திர சரிதத்தில் நிருபித்துள்ளார். திருவவதாரத்தை விளக்கும் இரண்டு ச்லோகங்கள் பின் வருமாறு :

वीणातत्वज्ञ संख्यालसित कलिसमाभाक् प्रमातीचवर्षे
कन्यामासेऽथ कृष्णप्रथमतिथियुतेऽप्युत्तरप्रोष्ठपाद्भे ।
कन्यालग्नेऽद्रिकन्यापतिरमितदयाशेवधिर्वैदिकेषु
श्रीदेव्यै प्राग्यथोक्तं समजनि हि विरिञ्चीशपुर्यां महेशः ॥

வீணாதத்வக்ஞ ஸங்க்யாலஸித கலிஸமாபாக் ப்ரமாதீசவர்ஷே
கன்யாமாஸே(அ)த க்ருஷ்ணப்ரதமதிதியுதே அ)ப்யுத்தர
ப்ரோஷ்டபாத்பே |

கன்யாலக்னே(அ)த்ரிகன்யாபதிரமிததயாசேவதிர் வைதிகேஷு
ஸ்ரீதேவ்யை ப்ராக்யதோக்தம் ஸமஜநி ஹி விரிஞ்சீசபுர்யாம் மஹேச: ॥

लग्ने रवीन्दुसुतयोः मकरे च मान्दौ
मीने शशिन्यथ वृषे रविजे च राहौ ।
चापे गुरौ क्षितिसुते मिथुने तुलायां
शुक्रे शिखिन्यलिगते शुभलग्नएवम् ॥

லக்னே ரவீந்துஸுதயோ: மகரே ச மாந்தௌ
மீனே சசின்யத வ்ருஷே ரவிஜே ச ராஹௌ ।
சாபே குரௌ க்ஷிதிஸுதே மிதுனே துலாயாம்
சுக்ரே சிகின்யலிகதே சுபலக்னஏவம் ॥

கன்யா லக்னத்தில், லக்னத்தில் சூரியனும்—புதனும் இருக்க, மகரத்தில் மாந்தியும், மீனத்தில் சந்திரனும், விருஷபத்தில் சனியும்—ராஹுவும், தனுஸில் குருவும், மிதுனத்தில் செவ்வாயும், துலாத்தில் சுக்கிரனும், விருச்சிகத்தில் கேதுவும் அமைந்த இந்த அற்புதமான ஜாதக அமைப்பில் நமது ஸ்ரீமத் தீக்ஷிதேந்திரர்கள் அவதரித்து அருளினர்கள்.

இப்படிப் பிறந்து விசேஷமாய் பிள்ளை பிறந்த சந்தோஷத்தை ஸ்ரீரங்கராஜாத்வரி கொண்டாடினர். ஸ்னனம் செய்து கோதானம், பூதானம் ஆகியவைகளை விசேஷமாகச் செய்து, ஜாதகர்மா செய்து, பதினொன்றும் நாளில் குழந்தைக்கு 'விநாயக சுப்ரமணியன்' என்று திருநாமம் சூட்டி, நாமகரணத்தை வைதிக் முறையில் நன்கு செய்தார். அருமையாகப் பெற்ற குழந்தையை அப்ப என்றழைத்தும், அப்பய்ய, அப்பய, அப்ப என்றெல்லாம் அழைத்தும் பரமானந்த நிலையை அடைந்தார். குழந்தை

அப்பய்யன் நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து தாய் தந்தையரின் மனம் மகிழ்ச்சியடையும்படி தாலாட்டுதலையும், பாராட்டுதலையும் பெற்று அவர்களுடைய அரும்பெரும் முத்தங்களையும் பெற்று வளர்ந்து வந்தார். இரண்டு வருஷங்கள் சென்றதும், ஸ்ரீரங்கராஜாத்வரிக்கு இன்னொரு பிள்ளையும் பிறந்தது. அந்தப் பிள்ளைக்குத் தனது தந்தையார் பெயரான ஆசார்ய தீக்ஷிதர் என்ற பெயரை வைத்தார். இவர் ஆச்சா தீக்ஷிதர் அல்லது ஆச்சான் தீக்ஷிதர் என்று அழைக்கப்பட்டார். அதன் பிறகு இரண்டு வருடங்கள் கழித்து ஒரு பெண் குழந்தையும் பிறந்தது. அந்தக் பெண் குழந்தைக்கு ஞானும்பிகை என்று பெயரிட்டார்.

## தீக்ஷிதேந்திரரின் வித்யாப்யாஸமும், உபநயனமும்

ஸ்ரீரங்கராஜாத்வரி அவர்கள் தமது மூத்த குமாரரான அப்பய்யருக்குத் தாமே அக்ஷராப்யாஸம் செய்துவைத்து, காவ்யம்—நாடகம்— அலங்காரம் —ஸாஹித்யம் முதலானவற்றைக் கற்பிப்பதற்கு **குருராமகவி** என்ற கவி ச்ரேஷ்டரை நியமித்தார். ஐந்து வயதிலேயே ஸ்ரீஅப்பய்யர் ஸகலவிதமான எழுத்து ஞானமும், ஸகல பாஷா ஞானமும், அழகான முறையில் ஸாஹித்யம் செய்யும் திறமையும் பெற்று விளங்குவதைக் கண்ட தந்தையாரும், குருராமகவியும் பரமானந்த நிலையை அடைந்தார்கள். ஸ்ரீரங்கராஜாத்வரியும் குருராமகவிக்குச் சிறந்த ஸன்மானங்கள் செய்து சிறப்பித்தார். கர்ப்பாஷ்டம வயதில் (அதாவது பிறந்த ஏழாவது வயதில்) அப்பய்யருக்கு நல்லதொரு நாளில் உபநயனம் செய்துவைத்தார். வேதாத்தியயனமும் செய்துவைத்தார். தனது கன்யாரத்னத்தை வாதூல கோத்திரத்தில் பிறந்த சிறந்ததொரு வரனுக்குக் கன்னிகாதானம் செய்தார். இங்ஙனம் தமது சந்ததிகளால் மிக்க பரமானந்த நிலையை ரங்கராஜாத்வரி அடைந்தார்.

## ஸ்ரீரங்கராஜாத்வரி சிவபதமடைதல்

ரங்கராஜ தீக்ஷிதர் இங்ஙனம் எல்லா வகையிலும் தன் நிறைவு பெற்றவராக வேலூர் சின்னபொம்மராஜன் என்னு மரசனால் போற்றப்பட்டு வந்தார். அடையப்பலம் கிராமத்தில் சோமயாகம் முதலான பெரிய யாகங்களைச் செய்து முடித்தார். பிறகு ஒரு நாள் தனது புத்திரர்களான இருவரையும் அழைத்து, 'குழந்தைகளே! நீங்கள் வித்யா சம்பத்துடன் அஹங்காரமற்றவர்களாய் என்றும் சந்திர சேகரக் கடவுளைப் பூஜித்து வாருங்கள். அனவரதமும் நீங்கள் விபூதி ருத்ராக்ஷ தாரணம் செய்தும், விபூதி ருத்ராக்ஷ தாரணம் செய்பவர்களை சிவபிரானாகவே எண்ணி அவர்களை வணங்குங்கள். யக்ஞபதியான பரமேச்வரனை யாகங்களால் ஆராதியுங்கள்'' என்று உபதேசம் செய்து சிவசாயுஜ்யம் அடைந்தார். அந்த சமயம் ஸ்ரீஅப்பய்யருக்கு வயது பதினாறே ஆகியிருந்தது. தனது தந்தையின் பிரிவைப் பொறுக்கமாட்டாதவராய்த் துக்கப்பட்டாரேனும், ஒருவாறு தைரியத்தையடைத்து பித்ருகாரியங்களை நன்றாகச் செய்து முடித்தார். தந்தையாரின் கட்டளைப்படி நடந்து கொண்டு அடையப்பலத்தில் வசித்து வந்தார்.

## சின்னபொம்ம அரசனின் ஆதரவு

இம்மாதிரி ஸ்ரீஅப்பய்ய தீக்ஷிதர் அடையப்பலம் கிராமத்தில் வசித்து வந்த சமயம், கோடி கன்னிகாதானம் என்ற பிருதத்துடன் கூடிய பாஞ்சராத்ர மதத்தைப் பின்பற்றியவரான ஸ்ரீநிவாஸ குருதாதாசாரியர் என்ற வைஷ்ணவர் சின்னபொம்ம ராஜனை அடைந்து தன்னுடைய மதத்தை அவன் மனத்தில் ஊற வைத்துத் தன்னை அனுசரிக்கும்படிச் செய்தார். அங்ஙனமிருந்தாலும், அரசன் சின்ன பொம்மன் ஸ்ரீ ரங்கராஜாத்வரி இல்லாது தனது சபையின் சோபை குறைந்து விட்டதாக எண்ணி அடையப்பலத்தில் இருக்கும் அவரது இரண்டு குமாரர்களையும் தனது நகரத்துக்கு

அழைத்து அவர்களுக்கு இடங்கொடுத்து தனது சபை வித்வான்களாகச் செய்தான். காலக்ரமத்தில் தாதா சாரியர் அரசனல் கௌரவிக்கப்பட்டு மந்திரி பதவியையும் அடைந்தார். சிவபக்தர்களை அவமதிப்பதில் பெரிதும் ஆர்வமுடையவராய், சிவாபாரதம் செய்கின்றவராய் இருந் தார். ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் தாதாசாரியர் செய்யும் காரியங்களைச் சகிக்கமாட்டாதவராய் சிவபெருமானின் முழுமுதல் தன்மையைப் பெரிதும் போற்றியும் சிவபக்தர் களைக் கொண்டாடியும் சாஸ்திர வாயிலாகச் சபையில் பிரகடனம் செய்தார். இவ்விஷயத்தை அறிந்த சிவ பக்தர்கள் எல்லோரும் பதிறேவயதான ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதரின் பெருமையை உணர்ந்து புகழ்ந்தார்கள். தஞ்சாவூர், ஸ்ரீகாளஹஸ்தி, வேங்கடகிரி, கார்வேட்டி நகர் போன்ற இடங்களில் உள்ள அரசர்களும் ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதரின் சிவபக்திப் பெருமையைக் கேட்டுத் தத்தம் நகர்களுக்கு அழைத்து அவரைப் பெருமைப்படுத்தித் தக்க சன்மானங்கள், பிருதுக்கள் போன்றவைகளால் கௌரவித்தனர். இங்ஙனம் நமது தீக்ஷிதேந்திரர் பல இடங்களிலும் சிவபக்தர்களாலும் மஹாராஜாக்களாலும் போற்றப்படுவதையறிந்து பாரதமாதா சந்தோஷித்தாள் என்றுல் மிகையாகாது.

## ரத்னகேட தீக்ஷிதரும் தீக்ஷிதேந்திரரின் திருமணமும்

இங்ஙனம் இளமையிலேயே பெயரும் பெருமையும் பெற்று விளங்கிய நமது ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் அவர் களுக்குப் பால்யப்பருவம் போய் யௌவனப்பருவம் வந்து நல்லதொரு கிருஹஸ்ததர்மத்தைப் பின்பற்ற வேண்டிய சமயம் வந்தது. அக்காலத்தில் ரத்னகேட தீக்ஷிதர் என்பவர் ஸ்ரீ காமாக்ஷி தேவியின் திவ்ய கிருபாபலத்தினல் அம்ருத மயமான வாக்விபூதியுடன் மஹாவித்வானக உலகத்தில் பிரகாசித்துக் கொண்டு சூரப்பநாயகன் என்ற அரசனல் கௌரவிக்கப்பட்டு அவனது ஆஸ்தான வித்வானக

இருந்தார். அவரது இயற்பெயர் ஸ்ரீநிவாஸ தீக்ஷிதர் என்று இருந்தபோதிலும் ரத்னகேட தீக்ஷிதர் என்ற பெயரையும் சேர்த்து ரத்னகேட ஸ்ரீநிவாஸ தீக்ஷிதர் என்றே கூறி வந்தார்கள். ரத்னகேட தீக்ஷிதர் என்ற பெயர் வரக் காரணம் மிகவும் அற்புதமானது.

ஒரு சமயம் பூனு ராஜ்யத்தில் மைதிலோட்ரம் என்ற தேசத்துக்கு அதிபதியான சந்திரசேகர பூபாலன் என்ற அரசன் ஒரு நாள் சாயங்கால வேளையில் ஸ்ரீநிவாஸ தீக்ஷிதரைப் பார்த்து, இன்று என்ன திதி என்று கேட்டான். உடனே ஸ்ரீநிவாஸ தீக்ஷிதர் "பூர்ணிமா" என்று பதில் அளித்தார். சபையில் இருந்தவர்களனைவரும் இதைக் கேட்டுச் சிரித்தார்கள். சிரித்த காரணம் என்னவென்று அரசன் கேட்டான். உடனே சபையோர்கள், "இன்று அமாவாசையல்லவா? தீக்ஷிதர் பௌர்ணமி என்று கூறினுரே" என்று பதில் கூறினர். அந்தசமயம், ஸ்ரீநிவாஸ தீக்ஷிதர் அரசனைப் பார்த்து, "அரசே, அவர்கள் பேச்சைக் கேட்க வேண்டாம். என் வார்த்தையில் ஸந்தேஹமும் அடையவேண்டாம். இன்று புண்யமான பௌர்ணமியே" என்று மற்றுமொருமுறை கூறினர். "பௌர்ணமி, அமா என்பது எப்பொழுது தெளிவாகும்?" என்று அரசன் கேட்டான். அதற்கு ஸ்ரீநிவாஸ தீக்ஷிதர் இன்று சூர்ய அஸ்தமனம் ஆனபிறகு தெரியுமெனக்கூறி ஸந்தியா வந்தனம் செய்யச் சென்ருர். ஸந்தியாவந்தன சமயத்தில் ஜகன்மாதாவான ஸ்ரீ காமாக்ஷி தேவியை உள்ளத்தில் தியானம் செய்து அர்க்கியம் கொடுத்தார். அப்பொழுது ஸ்ரீ காமாக்ஷி தேவி அவர் முன் தோன்றி, தனது காதில் உள்ள தாடங்கத்தை (தாடங்கம்—தோடு; காதில் அணியும் ஆபரணம்) எடுத்து அவரது கையில் கொடுத்து, "குழந்தாய் ஸ்ரீநிவாஸா! உனது வாக்கு பொய்யாகாது. இதை ஆகாயத்தில் தூக்கி விடு" என்றருள் செய்து மறைந்தாள். ஸ்ரீநிவாஸ தீக்ஷிதரும் அவ்விதமே அதை ஆகாயத்தில் செல்ல விடுத்தார். உடனே ஆகாயம் ஆயிரம் சந்திரர்கள்

உதயமானது போன்ற ஒரு பேரொளியுடன் தோன்றியது. இதைக் கண்டு தேவர்களே அதிசயித்தார்கள் என்றால் மானுடர்கள் அடைந்த ஆச்சர்யத்தைச் சொல்லவும் வேண்டுமோ? மன்னவனும் சபையோர்களும் ஒருங்கே அதிசயம் அடைந்து, "இத்தகைய பிரகாசம் எங்கிருந்து வந்தது? இது ஸ்ரீநிவாஸ தீக்ஷிதரின் மகிமை தான்'' என்று உணர்ந்து எல்லோரும் ஓடிவந்து அவரைப் பணிந்து போற்றினார்கள். அரசன் அவரை ரத்னமயமான சிம்மாசனத்தில் இருத்தி கணக்கில்லாததான நவரத்னங்களை சம்பாவனை செய்து, ரத்னகேடம் என்ற ஆபரணத்தையும் சூட்டிக் கனகாபிஷேகம் செய்தான். அன்று முதல் அவருக்கு ரத்னகேட தீக்ஷிதர் என்ற பெயர் பிரசித்தமானது.

இவ்வாறு ரத்னகேடதீக்ஷிதர் கீர்த்தியுடன் விளங்கி வரும் சமயம், ஒருசமயம் அவர் காஞ்சி மாநகரில் தனது கிருகத்தில் இருக்கும் பொழுது அவரை வாதத்தில் ஜயிக்க வேண்டுமென்று ஆசைகொண்டு காசியிலிருந்து பண்டிதர்கள் சிலர் ஒரு கூட்டமாக ரத்னகேட தீக்ஷிதர் வீட்டிற்கு விடியற்காலையில் வந்தார்கள். அச்சமயம் வாசலில் ஜலம் தெளித்துக் கொண்டிருந்த தீக்ஷிதரது தர்மபத்தினியைப் பார்த்து "ரத்னகேட தீக்ஷிதர் உள்ளே இருக்கிறாரா?'' என்று கேட்டார்கள். அவர்களது கருத்தினைத் தனது கூர்த்த மதியினால் உணர்ந்த அந்த அம்மையார் தாமும் ஸாஹித்யத்தில் வல்லவராதலால் அப்போது கோமய ஜலத்தினால் வாசல் தெளிக்க ஜலம் எடுக்கும் முறையை அனுசரித்து தாளபத்தமாய் 'பஞ்சசாமர விருத்தம்' என்ற விருத்தத்தில் ஜலம் தெளித்துக் கொண்டே அந்த பண்டிதர்களுக்கு சுலோகரூபமாய் பதில் கூறினார்.

विपश्चितामपश्चिमेऽथ रत्नखेटदीक्षिते
सपत्नजित्ययत्नतो विवादकेलिमागते ।

बृहस्पतिः प्रजल्पति प्रसर्पतिक्व सर्पराट्
षडाननो नतानानश्चतुर्मुखश्च दुर्मुखः ॥

விபச்சிதாமபச்சிமேऽத ரத்நகேடதீக்ஷிதே
ஸபத்னஜித்ய யத்னதோ விவாதகேலிமாகதே
ப்ருஹஸ்பதி: ப்ரஜல்பதி ப்ரஸர்பதிக்வ ஸர்பராட்
ஷடானனோ நதானனச் சதுர்முகச்ச துர்முக: ||

பண்டிதர்களுக்குள் சிறந்தவரான ரத்னகேட தீக்ஷிதர் விவாதம் என்ற விளையாட்டிலே இறங்கும் போது அனைவரும் எளிதில் ஜெயிக்கப்படுகிறார்கள். பிருஹஸ்பதி தேவரும் உளறிக்கொட்டுகிறார்; ஆதிசேஷன் எங்கோ நழுவி ஓடிவிடுகின்றார்; ஆறுமுகரான சுப்பிரமணியர் தனது தலையைத் தொங்கவிட்டுக் கொள்கிறார்; பிரம்மதேவன் (சதுர்முகன்) அவமானம் அடைகின்றார் என்பது இந்த ச்லோகத்தின் கருத்தாகும்.

இந்த சுலோகத்தைக் கேட்ட காசி பண்டிதர்கள் ரத்ன கேட தீக்ஷிதரின் மனைவியே இத்தகைய ஸாஹித்ய திறமை யுடன் இருக்கும் போது, அவர் எத்தகைய திறமையுடன் இருப்பார். அவரைப்பார்த்தால் நாம் அவமானப்பட்டு விடுவோம் என்று ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டு வந்த சுவடு தெரியாமல் திரும்பிப் போய்விட்டார்கள். இதனால் ரத்னகேட தீக்ஷிதருக்கு நிகரான பண்டிதரே இப் புவியில் இல்லை என்று சொல்லும் நிலைமை உண்டாயிற்று.

ஒருசமயம் சந்திரசேகர பூபாலன் ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதரின் மகத்தான பாண்டித்தியத்தைக் கேட்டறிந்து தனது ஆஸ்தான வித்வானான ரத்னகேட தீக்ஷிதரைப் பார்த்து, "நீங்கள் அப்பய்ய தீக்ஷிதரின் பாண்டித்யத்தைப் பற்றிக் கேள்விப்பட்டதுண்டா" என்று கேட்டான். இதைக் கேட்ட ரத்னகேடதீக்ஷிதர் கொஞ்சம் கலவரமடைந்த

முகத்துடன் "அரசே! நான் அப்பய்ய தீக்ஷிதரின் பால்யத்தில் அவரது அதிகூர்மையான புத்தியை அறிவேன். இப்பொழுது பதினன்கு ஆண்டுகள் ஆனதால் அவர் ஸகல வித்யைகளிலும் நிபுணராக ஆகியிருக்கலாம். சமயம் கிடைத்தால் அவருடன் வாதம் செய்யவும் ஆசையுடன் அந்த வாய்ப்பை எதிர்நோக்கியிருக்கின்றேன்" என்று பதில் கூறினர். மஹாராஜாவும், "நல்லது. அவருடன் வாதம் செய்து வாருங்கள்" என்று கூறி காஞ்சிபுரத்துக்கு அனுப்பினன். ரத்னகேட தீக்ஷிதர் காஞ்சீபுரத்தில் இருக்கும்போது நவராத்திரி வந்தது. காமகோடி ஜகன்மாதாவை சிறப்பாகப் பூஜித்தார். ஸ்ரீ காமாக்ஷி அம்பாள் ப்ரத்யக்ஷமாகி "குழந்தாய், ரத்னகேடா! உனக்கு வேண்டிய வரத்தைக் கேள்" என்று அருளிச்செய்தாள். கண்களில் ஆனந்த பாஷ்பம் பெருக, தன்முன்னே பரமகருணையுடன் ப்ரத்யக்ஷமான தெய்வத்தை ரத்னகேட தீக்ஷிதர் பல முறை வணங்கினர். உள்ளம் உருக, நாத்தழதழக்க, உடல் புளகாங்கிதமாக தோத்திரங்கள் பல செய்து, "அன்னையே! அடைந்தவர்க்கு வேண்டியவற்றைக் கொடுக்கும் தெய்வமே! அப்பய்ய தீக்ஷிதர் என்ஞெருவர் ஸகல வித்தைகளிலும் சிறந்தவர் என்று கேள்விப்படுகிறேன். எல்லா வித்யைகளும் அவரிடமே குடிகொண்டு அவரையே வணங்கி நிற்கின்றன என்றும் கேட்டறிகிறேன். தாயே! எனது கீர்த்தியும் உனதருளால் உலகம் அறியுமாதலால் அவரை நான் ஜயிக்கவேண்டும், எனக்கு நீ ஜயத்தை அளிக்க வேண்டும்" என்று வேண்டினர். இதைக் கேட்ட ஜகன் மாதா சிரித்தாள். சிரித்துக் கொண்டே ரத்னகேட தீக்ஷிதரை நோக்கி அருளிச்செய்தாள். "ரத்னகேடா! நீ அந்த அப்பய்ய தீக்ஷிதரை மானிடன் என்று எண்ணுதே. அவர் சாக்ஷாத் பரமேச்வரனே யாவர் என்று அறிந்து கொள். நான் உனக்கு அருள்பாலித்ததெல்லாம் மனிதர்களை ஜெயிக்கவேயன்றோ? பரமேச்வரனை ஜயிக்க அல்லவே! பரமேச்வரன் அவர். நான் தான் நீ. எனவே நீயும் அப்பய்ய தீக்ஷிதரும் வாதம் செய்வது முறையல்ல. நான் ஒரு வழி

கூறுகிறேன். உனது பெண்ணுன மங்களாம்பிகையை அந்த அப்பய்ய தீக்ஷிதர் என்ற மகானுக்கு கன்யாதானம் செய்து கொடுத்துவிடு. இம்முறையில் உனது மனோரதம் நிறைவேறும். உன்னுடைய பாண்டித்யத்தாலும், வயதாலும், எனது அனுக்கிரஹத்தாலும் அப்பய்ய தீக்ஷிதருக்குக் குருவாகவும், மாமனுராகவும் ஆவாய்'' என்றருள் பாலித்து மறைந்தனள். இவ்வழகிய செய்தி அடங்கிய சுலோகங்களைப் பார்ப்போம்.

ஸ்ரீரத்னகேட தீக்ஷிதர் கேட்ட வரங்கள்:—

अम्बाश्रितेष्टवरदे अप्पयदीक्षिते मे
दीव्येत्कला किमु नमस्यति सोऽथवा माम् ।
जानाति मच्चरितमीश्वरि सर्वलोकः
तत्कृच्छ्रतोऽपि विजयं कुरु शङ्करीति ॥

**அம்பாச்ரிதேஷ்டவரதே அப்பய தீக்ஷிதே மே**
**தீவ்யேத்கலா கிமு நமஸ்யதி ஸோ(அ)தவா மாம் |**
**ஜாநாதி மச்சரிதமீச்வரி ஸர்வலோக:**
**தத்க்ருச்ச்ரதோ (அ)பி விஜயம் குரு சங்கரீதி ||**

தேவி அருள் செய்தது:—

वत्सालमत्र शिव एव न मानुषोऽयं
तुभ्यं नृलोकविजयाय वरो हि दत्तः ।
शम्भुस्स सूरिरहमेव भवान्हि तस्मात्
तुल्यश्रियोर्न कुशलं युवयोर्विवादः ॥

**வத்ஸாலமத்ர சிவ ஏவ ந மானுஷோ (அ)யம்**
**துப்யம் ந்ருலோக விஜயாய வரோ ஹி தத்த: |**

